கடவுள் துணை.

பெரியபுராணத்துள்

அறுபத்துமூன்று நாயனமார்களில் ஒருவராகிய

# திருநாளைப்போவார் என்னும்

# நந்தனார்சரித்திரக்கீர்த்தனை.

## சிதம்பரக்கும்மி.

இவை,

ஆனைதாண்டவபுரம்

**பாரதி-கோபாலகிருஷ்ணையரால்**

இயற்றப்பட்டு,

---

திருமழிசை,

**அருணாசலமுதலியாரால்**

பார்வையிடப்பட்டதை,

ஐதீகப்படி வெதத்திராப் படங்களுடன்

சென்னை-குயப்பேட்டை

**வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்**

பதிப்பிக்கப்பட்டது.

---

1920

இதன் விலை ரூபா—1

# மயிர்வளரும் பரிமளத்தைலம்.

இந்தத் தைலத்தில் கொஞ்சம் கையில்விட்டுத் தேய்த்து தலையில் தடவிவர மயிரின சிவந்தநிறம், சுண்டு மயிர்வெடிப்பு மயக்கம் தலைசுழற்றல் முதலிய பித்தசம்பந்தமான வியாதிகளையும் கண்ணெரிவுமுதலிய நேத்திரவியாதிகளையும் கண்டித்து மயிரைக்கறுமையாயும் செழிப்பாயும் அடர்த்தியாயும் வளரச் செய்வதோடு, சுகந்த வாசனையையும் மயிர்க்கால், கண், மூளை, இவைகளுக்கு குளிர்ச்சியையும்கொடுத்துப் பித்தசாந்தி செய்து இரவில் சுகமான நித்திரையைக் கொடுக்கும். இவை நாளடைவில உபயோகித்துவந்தால் பித்தத்தால் நரைத்தமயிர்களும் கறுக்கும். இதை ஒருதடவை உபயோகித்தவர்கள் மறுபடியும் இதை கைவிடார்களென்பது திண்ணம் ஸ்திரீகள் புருஷர்கள யாவரும் உபயோகிக்கலாம் இந்த தைலத்திற்கு வேறுசில எண்ணைகளைப்போல மயிரை உதிர்த்தல் முதலிய கெட்டகுணங்க ளிலலையென்று உறுதியாய் சொல்லுகிறோம்.

இதன் விலை ரூபா 1.

எமது கேட்லாக் வேண்டுமானால் அரையணு தபால் ஸடாம்பு அனுப்பினால அனுப்பபபடும.

இப்படிக்கு,

பி. நா. சிதம்பரமுதலியார்,
பிரமபூர் பாரெக்ஸ் போஸ்டு,
மதராஸ்.

உ

திருச்சிற்றம்பலம்

# நந்தனார்சரித்திரவரலாறு.

திருவெண்ணீறுதரித்த பராசத்தியாகிய உமாதேவியார் சகிதம் பரமசிவன் திருக்கொலுவீற்றிருக்கும் வெள்ளிமலையானது, இமயமலையின் பக்கத்திலிருக்கின்றது அது, பெரியோர்கள் பரிசுத்த மனம்போலும், படிகம்போலும் பலவிலகிற புண்ணியங்களெல்லாந் திரண்டுருண்டொருவடிவாகப் பிரகாசிப்பதுபோலு மிருக்கின்றது அதில், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்குவேதங்களினொசையும், வித்தியாதரர்கள் வீணையோசையும், யானைகளுடைய முழக்கமும், வானதுந்துபி முழக்கமும், இடைவிடா தொலிக்கின்றன அன்றியும் தேவர்கள் சிரமாலைகளும், கற்பகமாலைகளுங் கண்டு, பற்பலமுனிவர்களுநமஸ்செய்து அம்மலைப்பக்கலில் நெருங்கியிருக்கின்றனர் அது அமரர், சித்தர், அசுரர், தைத்தியர் கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர், காந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாயவாசிகள் போகபூமியர் என்னும் பதினெண்கணங்களுந் துதிக்கத்தக்கது. அக்கயிலாய மலையின்மேல், கோடிசூரியர் பிரகாசிப்பதுபோலும் விளங்குகின்ற நவமணிகள் பதிக்கப்பட்ட திருக்கோயின் முதற் கோபுரவாயிற் காவற்றலைவராயிருப்பவர் நந்திதேவர். அவர், பரமசிவனுடைய திருப்பணிகளுக்கும் திருக்கொலுவிற்கும் அதிகாரத் தலைவர் இவர், உடைவாளும் திருப்பிரம்பு பெற்றுக் கைலையைக் காக்கப்பட்டவர் தேவர்முதலான யாவருக்குமேலானவர், பரமசிவனிடத்து அதிகபக்தியும் அன்புமுடையவர் இவரால், இரவும் பகலும் இடைவிடாது காக்கப்பட்ட வெள்ளிமலையெனனும் கைலாயத்தின் அடிவாரத்தில், எச்சமயத்தினும் மேலான சமயம் சைவசமயமென்றும், எக்கடவுளினும் பரமசிவனே மெய்க்கடவுளென்றும் அறிந்தவர் உபமன்னியமகாமுனிவர் இவர், கிருஷ்ணபகவானுடைய சிரசின்மேல் தம்முடைய திருவடிகளால் தீட்சை செய்வித்தவர், இறப்பற்றிருக்கின்றவர், சிவபிரானுடைய கிருபையால் திருப்பாற் கடலைக்குடித்தவர், சிவனிடத்திடைவிடாதன்புள்ளவர்.

இந்த உபமன்னிய மகாமுனிவர் தம்மிடத்தில் அடியார்களும், பெரியோர்களும், முனிவர்களும் புடைசூழ்ந்திருக்கின்ற சமயத்தில், அவ்விடத்தில் ஆயிரஞ் சூரியகிரணங்கள் ஒன்றுகூடித் திரண்டாற்போலும் ஒருபிரகாசந் திரண்டுதோன்றி அங்கிருந்தவர்களெல்லோரும் உபமன்னிய மகாமுனிவரை நோக்கி, இதென்ன ஆச்சரியம் இப்படிப்பட்ட பிரகாசந் தோன்றவேண்டிய காரணமென்னவென்றுகேட்க, உபமன்னியர் சிவபிரானைத் தியானித்துச் சொல்லுகின்றார் தென்திசையில் ஆதனூரில் அவதரித்த திருநாளைப்போவார் என்னும் திருநாமம் பெற்றவர் சிவனது திருவருளால் வருகின்றாரென்று இருகரமுஞ் சிரமேற்குவித்து அத்திசையைநோக்கி வந்த

னஞ்செய்து ஆனந்தக்கண்ணீர் அங்குமெங்குஞ்சிந்த உபமன்னியர் துதிக்கும்போது மற்றவர்கள், தங்களுக்குண்டாகிய சந்தேகநீருமபடி அம்முனிவரைப் பணிந்து கேட்கத் தொடங்கினார்கள்.

எங்களாண்டவராகிய முனிவரே சிவபிரானுடைய திருவடிகளையன்றி மற்றொருதெய்வத்தையும் வணங்கமாட்டீரே இப்பொழுது வணங்கவேண்டிய காரணமென்னவென்று முனிவர்கள்கேட்க உபமன்னியர் சொல்லுகின்றார், கேளுங்கள் முனிவர்களே? பரமசிவன தரிக்கப்பட்ட திருமாலையும், தெருவெண்ணீற்றினையும் அணிகின்றவர் எள்ளிட இடமில்லாது கொள்ளிடநதிசூழ்ந்த சோழவளநாட்டிலிருக்கும் மேற்காநாட்டில் ஆதனூரில் தீண்டப்படாதவர் குலத்தில் சேற்றிற்செந்தாமரை யுற்பவமானாற்போலும் நந்தனாரென்பவ ரொருவர்பிறந்தார். அவர் விவேகசூட்சியும், வெட்டிமைத்தனமாகிய காணியாட்சியும், சிவபணிவிடைகளில் மாட்சியும், சிவனடியாரைக்காணுங் கண்காட்சியும் உடையவர். இவர், குலாசாரத்தன்மையுஞ்செய்துமலர்பெய்து தானுசிவபூசைசெய்து சிவாலயங்களுக்கு அறையும்பேரிகை மததளங்களுக்குத் தோலும்வாரும் யாழுக்கு நரம்பும், சுவாமிக்குக் கோரோசனையும் முறையாகவும், இறையாகவும் கொடுத்துவருவார் சிவாலயத்தில் அந்திசந்தியிற்போய் தூரத்திலிருந்து மனமுகசிந்துருகிச சிவனைப்பாடியாடி வருகிறநாளில், திருப்புன்கூரில பரமசிவனைத்தரிசிக்க ஆதனூரிலிருந்து வந்து திருக்கோயிலின் திருவாயிலினின்று சிவலிங்கதரிசனைகாண ஆவலாகவும், காதலாகவும் வணங்கிப்பாடுகையில, பரமசிவனார் சந்நிதிக்கு முன்னிருக்கும் நந்திதேவரை விலகும்படிசெய்து காட்சிகொடுத்தருளினார்.

நந்தனார் சுவாமி தரிசனைசெய்து வரும்வழியில் ஒரு பள்ளத்தைத்கண்டு (அதைப் பெருங்குளமாகவெட்டித்) தம்முடைய ஆதனூரெனனுஞ் சேரிக்குப்போனார். இவ்வாறு பலதலங்களையும் வலஞ்செய்து தொழுதுகொண்டு சிதம்பரத்திற்குச் செல்ல மனம் வைத்து தமமுடையசாதி கோயிலுக்குப்போக யோக்கியமில்லையென்று விசனமடைந்து நாளைக்குப் போவோமென்று சொல்லியிருந்தார் சிவபணிவிடையாலுந் தன்னை யடிமைகொண்டிருந்த வேதியருத்தரவு தடையினாலும் போகக்கூடாமல அனேகநாட்கள் சென்றபடியால, அவருக்குத் திருநாளைப்போவாரென்று பெயர்வந்தது. அதனபிறகு, திருநாளைப்போவார் சிதம்பரம்வந்ததும் சுவாமி அவருக்குக் காட்சிதந்ததும் ஆகிய சரித்திரங்களை உபமன்னிய மகாமுனிவர் சொல்லக்கேட்டு யாவரும பேரானந்தமடைந்தனர் .இதனடியில்வரும் நொண்டிச்சிந்தினால் ஷை சரித்திரவிவரங்களைத் தெரிந்துகொள்ளலாம.

---




உ

சிவமயம்.

## திருநாளைப்போவாரென்னும்

# நந்தனார்சரித்திரக்கீர்த்தனை.



### கற்பகவிநாயகர் துதி

### காப்பு வெண்பா

கந்தன்றனைய[illegible]ரித்த காதலனாபேறுபெற்ற
நந்தன்சரிததிரத்தை நானியமபச-சுந்தரஞ்சேர்
தில்லைமணிகோபுரத்திற் றேடிவளாகறபகததாள்
அல்லுமபகற்றுணையே யாம்

---

### முக்குறுணிவிநாயகர் துதி

### விருத்தம

நநதணிகரத்தான் றில்லை நாயகனருளால்வந்த
நந்தனமுக்குறுணியான்றன் னளினபொற்றாள்வணங்கி
நநதன்பேரருட்பாலுண்ட நற்புகழ்ச்சொலிபபின்போர
நநதமுற்றுலகினுளும நலமுடன்வாழ்குவேனே.

---

### சபாபதிதோத்திரம்.

### கலி-விருததம

துக்கசீரத்திகொள்ள நந்தன்சரித்திரம்
இக்கதையை யெடுத்தேயியமபிட
செக்கர்மேனியன் தில்லைசசபைதனிற்
றக்கத்தோமெனுந தாட்கள்சிரங்கொள்வாம்.

சிவகாமவல்லிதோத்திரம

விருததம

பாம்பினைததந்தையாகப படைததுபபின்பெவருங்காணப்
பாம்பினைபபணியாய்க்கொண்ட பரையருடபாதமேததிப
பாமபினிறபுலியும்பாம்புமபாாத்திடநந்தனாக்கன
பாமபடிமுததிதநத பழஙகதைபபகருவேனே

---

சுபபிரமணியா தெயவானை சரஸ்வதி
இலக்குமி-விஷ்ணு-இவாகளதுதி
விருததம

சசசிதானநதசதாசிவனருளேசசாாநத நிததியானந்தநநதன
உசசிதக்கதையைகீாததனையாக வுலகெலாநதுதிததிடசசொல்ல
அசசிலேவேற்கையறுமுகனதெய்வ யானைசெஙகலைமகள்மாலை
பசசைமான்மறறுமபாவியதேவா பாதபங்கயமபணிகுவனே.

---

திருததொண்டாமுதலியதிலலைமூவாயிரவாதுதி.
விருததம

வாதவூரடியாரோடு மறறுமபததுமூவா
பாதமேவணஙகிததில்லைப பதிதனிலுறைமேவும்
போதமூவாயிரத்தோா பொனனடிககமலமுனனி
யோதுநநதனாசரிதை யுரைததிடததுணிநததாமே

---

அவையடககம

விருததம்

சிறபிகள்காண்போாசிநதையுமுவககச செபபுநல்வினபுறததீட்டும
விறபனஙகணடவறிவிலாமெனமூதும விதமெனமுத்தமிழெனனுஞ
சொறபுகழ்கல்விததுறையெலாநதெரிநத தூயநறபுலவர்முனகருதி
பொறபுறவிசைககுஙகீாததனமிதனைப புவிமிசைமதிபபாகளமமா.

---

விநாயகாதுதி.

இராகம-மோகனம-ஆதிதாளம.

பல்லவி

கணநாதாசரணம — காததருள்
கணநாதாசரணம்

அநுபல்லவி

பணமார்சேஷன்றாங்கியபாரமீதினிலே — நேருங்
குணமானநந்தனசரித்திரங்கூறக்கிருபைக்கண் — பாருங் (கண)

சரணங்கள்

சொல்லுமம்பரணவமூலா தூயவேதாந்த — நாதா
துலங்குமுனிவர்மனத்துகளறுத்தருட — போதா
நலமோதகமுதல்நாடிநுகர் — வினோதா
நாயேனசொல்லுநந்தமிழைநாடிரக்ஷிக்குந — தாதா (கண)

அம்பரமானமனறுளாடும்பர — னளிக்க
அரைநொடியினிலவலமாகிமனங் — களிக்க
உம்பர்பிரானுகந்துவுயாமாங்கனி — யளிக்க
உளந்தளராமலுணமுதலவாதுய — ரொளிக்க (கண)

தேஜோங்குநவரதநசிகரமேலைக்கோ — புரத்
தேவீற்றிருக்குமெங்கள் தேவாகுண்ட — லாதர
பூஜித்தவாக்குவரம் புரிந்தருளு — மாதார
பூமிசைநாட்களுசெய புநிதவோ — மரகர (கண)

---

புராணிகர்சொல்-விருத்தம்.

வளம்பெருந்தருமமோங்கியளாத
ஞூரினிலவாழ்ந்திடும்புலையா
உளமகிழ்ந்தெங்களகுடிப்பெயர்விளங்க
வுதித்தநற்றீபமேமணியே
களங்கிலாககதிரேயெனப்புகழ்ந்தோதக
கதித்தசீர்நந்தனர்சரிதம்
விளம்பிடமுதலிறைருடயம்படித்து
மேனமையுமிகப்படைத்தனனே.

தோடயம்

இராகம்-நாட்டை-ஆதிதாளம்.

திருவளர்தருமாத — னூரா - செறிபுலைக்குடிலவதாரர்
தருமநெறிநந்தனார்ப — பேரா - சரித்திரமதனைசசொலவே-ஆ-ஆ
அருள்வளர்கஜமுக — சாமி - அம்பிகைதந்தருளுஞ்சாமி
அங்குசகரதல — சாமி - அமையத்தாணிதந்துணையே-ஜெ
வண்டணிமாமலர் — தாரன - மண்டமைவாழ்ந்தியதீரன
அண்டுமெளியர்க்கு — தாரன - மன்னுங்கதைசொலவே-ஆ-ஆ

ண்டரீகபுரத் தீசன் - புராரியுளமகிழ்நேசன்
தண்டலர்மாமண வாசன் - தாமரைத்தாள்கடுணையே - ஜெய

---

மங்களம்.

விருத்தம்

சங்கரன் றனக்குசண்முகன் றனக்குமசதுர்முகப்பிரமனுர்தனக்கும்
பஙகயமாற்குமவாமனையாட்கும பார்மகட்பாவலர்தமக்கும்
தங்கியவட்டவசுக்களானவாக்கும் சதூமறையோதுமநதணர்க்கும்
பொங்கியமூவாயிரநநதனூக்கும் பொதுப்படமங்களமபுகல்வாம,

இராகம்-அசாவேரி-அடதாளம்.

பல்லவி

ஆதிமத்தியாந்தனுக்குமங்களம்-எங்கள்
ஆநந்தநந்தனூர்க்கு மங்களம்.

அநுபலலவி.

பாதிமதிநதியும் பாம்பும்புலி யுரியும்
சோதிக்குழையணியுந் துலங்கவருட் புரியும் (ஆதி)

சரணங்கள்.

சிலையைவடிவழகிற் சிறந்தவொருபெண் ணுக்கி
சிலைவனைததபரசுராமன்கொவததைப் போக்கி
மலையைச்சுமநதுபெருமடுவிலொருகாற் றாக்கி
மாநடனஙகள்செயத மாயமானினையெய்த (ஆதிமத்)

குருபரநாதருக்கும குறமகட்பாக ருக்கும்
அருணகிரிநாதனுக் கருள்செய்விசாக ருக்கும்
ஒருமுருகாவென வுளங்களிததவ ருக்கும்
உம்பாகோனுக்குகந்த வுயரரசினைததநத (ஆதிமத்)

சககரைமுக்கணியவல் தனிநுகா நாதருக்கும்
சகலதேவர்தமக்குஞ சகலவசுக் களுக்கும
பக்குவமாகவிதைப பாடுஞசங்கீத ருக்கும
பார்மகட்குமபங்கயப் பாவையர்க்குமவிஜய (ஆதிமத்)

பெரியபுராணசசெய்யுள்-விருததம்.

திருமறையோர்புராணமவைபதின்மூன் றுசிவவே
தியாரனைவழிபட்டபுராணமீரிரண்டு
குரைகழன்மாமாததிரரொன் றறுவர்முடிமன்னர்
குறுநிலமன்னவரைவர்வணிகர்குலத்தைவ

ரிருமைநெறிவேளாளர்பதின்மூவரிடைய
ரிருவாசாலியாகுயவர்தயிலவிணையாளர்
பரதவர்சான்றாவண்ணாசிலைமறவர்நீசர்
பாணரிவரேரொருவராமபக்ருங்காலே

## உபமன்னியபகவான்

### ரிஷிகளுக்குச் சொலலிய வசனம.

இவ்வுலகில், பெரிதாகிய வேதசாஸ்திரங்களுககுளளே மிகவி சாரமாகிய பரசிவபததியை யுண்டுபண்ணுகின்ற பகதவிலாசததை (உபமன்னியபகவானனவா) அநேகரிஷிகள் கேட்கச் சொல்லுகின்றா. (பெரியபுராண) மென்று சொல்லபபட்டநூல சேக்கிழார் சுவாமிகளாலே செய்யபபட்டது ஸ்காநத புராணத்திலும, இன்னமனேக புராணங்களிலுஞ் சொல்லப்பட்ட பக்திமார்க்கங்களாகிற கடலிலே நீரைக் கையாலள்ளிக் குடிததது போலச சிலது கீர்த்தனஙகளிலைலும், விருத்தங்களிலைலும, சிவபததாகள் சரித்திரங்களைக் கொண்டாடுவதுபோல உளறினேனென்று (ஆனை தாண்டாபுரம்போல கிருஷ்ணையன) பெரியோா அடிவணங்கி ஆனந்தம் பெருகிச் சொல்லிய (திருநாளைப்போவார் சரித்திரததை யாவருமவினவிக்கேட்கும்படி சிரம்வணங்கி விஞவினேன், பாகவதம், பகவற்கீதை சிவரகசியம், ஸ்காந்தமுதலாகிய பக்திஞான வயிராக்கிய சாஸ்திரஙகளிலே மிகவுஞ் சாரமாகிய பரமசிவபகதி பண்ணுமல், இச்சுரவேத பராங்கதனுயிருக்கின்ற பிராமணனைப் பார்க்கிலும், பரமசிவபாதாரவிநத பததிபண்ணுகிறவன் பறையனுயிருநதாலும், பதினன்கு லோகத்தையும் பரிசுததம் பண்ணுவானென்று (உபமன்னியபகவான்) சொல்ல அதற்கு ரிஷிகள் சொலலுகின்றாகள் பத்திஞான வயிராக்கியங்களைத தெரியப்படுத்தா நின்ற வேதபுராணங்களைப்பாாக்க அறியாராம, அன்றியில் அவ்விவேகிகளாயிருக்கிற சண்டாளர்களுக்கு எப்போது பததிவருமென்று ரிஷிகளகேட்க (உபமன்னியபகவான்) சொலலுகின்றார்

## உபமன்னியபகவான் ரிஷிகளுக்குச்சொல்லுகின்ற

### நொண்டிசசிநது-இராகம-புன்னுகவராளி.

பழனமருஙகணையும - புலைப்-பாடியதுகூறைவீடுதனில், சுரையோபடர்நதிருக்கும் - அதைச் - சுற்றிலும்நாய்கள் குலைத்திருக்கும் பரந்தொழிவட்டபிடிம-இளம-பசசைபாசிறைதோ லிச்சைகொண்டு,

கோழிகூவுங்கூக்குரலும்-பாழுங் - கொல்லையருகினில் வெள்ளெலும
பும், நரம்புங்குவிந்திருக்கும்-பல - நெட்டிமிதந்திடுங்குட்டைகளில்,
நண்டோகுடியிருக்கும் - சிறு-நத்தைகமடம வலுத்திருக்கும், தோ
லூருங் கேணிகளில - வெகு-தொல்லைப்படுமெவாடை சொலலறியாப,
பரமபோ அடித்திருக்கும் - வயற் - பக்கங்களிலமெத்த நொகமெலு
மபும், கிழிந்தோல நரமபுகளும் - அவர்க-கினமிலலைசிறு மீனுலறும,
தெருவில் விளையாடிக்கொண்டு - அவா-தெநதினமபாடுவா சுநதரமா
ய், சங்குதோடுகாதணியும - அருந - தாவடமேபவா நூலிடமாம,
மணியோ தரிததிருபபாா-தெரு - வாசறபுறததினி லேசிக்கொண்டு,
கொண்டாட்டமாயிருபபாா - கையைக-கொடடிககொண்டு தனக்கி
ஷ்டமுடன், மதுவுண்டு கெககலிபபார் - பறை-வாததியமும் வெகு
நேத்தியுடன், இருக்கும புலைபபாடி - அதில-ஈசன்திருவடி நேசமு
டன், சாரும ஒருபுலையா-அவா-சாதிமுறைததவறாதவராம், நநதனு
ரவாபெயராம-வெகு-நலலவராமிநதத தொலலுலகில, அவரே சிவன
டியார்-அவாக்-காருமெதிரிலலைத் தாரணியில், கோடிகோடிசென்மங்
களோ • முன்னங் - குறறமறச்செய்த நறறவமே, அவதாரமானது
வோ-ஈசன்-அன்புபுரியுமபேரினபசுகம், கொள்ளைகொள்ளவோபிறந
தார் - திருக்-கோயிலவலமவநதாராவலுடன், செய்யுமபணிவிடைக
ள்-ஈசன்-சிந்தைமகிழ்நது குளிநதிடவே, மத்தளபேரிகைகளும்-இ
சை-வாரகொடுததபபுறந தோல்கொடுததது, மறவாமலேதினமும-நல
ல-வாசம்பெருகுங கோரோசனையும, தேவாலயஙகளதோறும் - தங்
து-சிததமுருகியமததிவெள்ளம, புரண்டோடிக்கங்குகரை - என்று -
புகலற்கரிய வொண்ணுதுகணடா, சாதியில நீசனவா - பேணிச-சா
ருமுறவின்முறையாருடனே, திருபபுன்கூரசெனறரனைக் - கண்டு-
சேவித்திசைபாடிவைத்தபின், தில்லைசசிதமபரத்தைக - கண்டு-சேவி
க்கவேண்டுமென் றுவலுடன், நாளைபபோவே னென்றாராம - பின்
னும்-நாடும்பறையாகளோடிவந்து, அண்ணேநீ போகாதே-நமக்-கா
ண்டைபொல்லாதவன் வேண்டிககொளவான, பாபபாரசாதியுண
டே-அதென்ன-பாடுபடுமுழக்காடுமங்கே, நமக்குந திருநாளோ-அ
நத-ஞாயமுண்டோ யென்ன மாயமிது, வெனறே தடைசெய்தாா-
சிவன்-வேடிக்கைதானென்று நாடிககொண்டே, அரியாதுபோலிரு
நத-செம்பொன்-னமபலததாடியைக் குமபிடவே, ஆதனூர்தனிலிரு
ந்து-விடும்-அமபுபோலப்பறந் தையமின்றித, தில்லையருகில்வநதாா-
மனங-தேறிக்கொண்டாாக் குறையாறிக்கொண்டார், கெண்டாமணி
யோசை - காதில-கேட்குதென்றாரதைப பார்க்கவென்றே, கொண்
டாட்டமாகிவந்தார் - கையைக்-குவித்துக்கொண்டே தனக்கபிட

களவுகுலசெய்து  வந்தாலும்-பழி
காரருடன் என்னேரங்கூடியிருந்  தாலும்
வளமறவேவாழவுகெட  டாலும்-நல்ல
மனதனவனிடமாகமறலிவந்  தாலும் (நீசனாய்ப்)
எத்தக்கருமங்கள்செய்  தாலும்-எங்கு
மிடையாதகொடையாளியென  விருந்தாலும்
கோத்திரக்கோத்திமிகுந்  தாலும்-எங்கள்
பாலகிருஷ்ணனதெர்மம பாதமிணையாதோன் (நீசனாய்ப்).

வசனம்

இப்படியே பக்திசெய்தாலபோதும மற்றசாதி வருணாசிரமங்களினாலே ஒனறுமபிரயோசனமிலலையெனறும, ஒரு இதிகாசத்தைச் சொலலுகினறார். பூர்வகாலத்திலே, திலலைவெட்டியானென்றும கெறறன, சாமபனெனறும, ஆதனாநந்திசாமபனெனகிற திருநாளைபபோவாரென்றும பெயாபெற்ற இமமூனறுபேர்களுந் திருசசிற்றமபலத்தையடைந்தார்கள் இமமூனறுபேர்களில, நந்தசாமபனெனபவாமாத்திரம திலலைமூவாயிரமபேர்களும பார்ககச சபாபபிரவேசமானாரெனறுசொலல, ரிஷிகளெலலாரும ஆனந்தமடைந்து உபமனனிய மகாரிஷியைப பிரதட்சணஞ்செய்துப பாடிவணங்கி அஞ்சலிசெய்து ஓய்சுவாமி! எல்லோரும பார்த்திருக்கையில முத்தியடைந்த திருநாளைப போவாரெனறு பெயாபடைத்தப பேருபெற்ற சிவபக்தருடைய சரித்திரத்தைச சொலலுங்களென்று ரிஷிகள பிரார்த்தித்துக் கேட்குமபோது, உபமனனிய மகாரிஷியானவா மிகவுஞ் சந்தோஷமடைந்து ஈஸ்வரனுடைய குணங்களை வருணிப்பதைப்பார்க்கிலும் ஈஸ்வரபக்தர்களுடைய குணங்களைச சொல்லுகிறது மெத்தவும புருஷார்த்தமெனறு சொலலத்தொடங்கினார் சிதமபரத்திற்கு நாளைப்போவேனெனறு சிலதுநாள் நந்தன சொல்லிவந்தபடியால, நந்தனுக்கு நாளைப்போவாரென்று நாமதேயமுண்டாச்சுது, ஆகிலும ஈஸ்வரனுடைய குணங்களைச சொனனாலுஞ் சொல்லலாம பக்தர்களுடைய குணங்களைச சொலல யாவர்க்குந் தெரியாது தெரிந்தமட்டுஞ்சொலலுவோமெனறு மயிர்சிலிர்த்து ஆனந்தக்கண்ணீர்வடித்து மனங்களித்துப பரமசிவனை நினைத்து வாயாலதுதித்து ஆத்துமா ஆத்துமிகளாயிருக்கின்ற தாபத்திரயங்களினாலே துனபபட்டிருக்கின்ற செந்துக்களுக்கு அமிர்தவருஷம வருஷித்தலபோல நந்தனுடைய புண்ணியசரித்திரத்தை வருட்சிக்கத்தொடங்கினார்.

இராகம்-சங்கராபரணம-ஆதிதாளம
பலலவி.

நநதன்சரிததிரமானநதம-ஆனாலுமததி
யநதமபக்திரசகெநதஞ-சொலலசசொலல (நந்தன்)

நநதன்சரிததிரமவெகுஅநதஞ-சிவனுருககுச
சொநதநதுலையுமபவபநதங-கேடடபோககு (நநதன்)

ஏதுயிவனபபோலேசாது-பூமியிலிருக
காது அரிகாது இருகாது-படைததபோககு (நந்தன்)

வாடிமனதிளகிபபாடி-அரகராவென
ருடிகனகசபைநாடிச-சேருவேனெனற (நந்தன்)

அண்டாகொண்டாடுஞ்சோழ-மண்டலநாதனைச்சூழக்
கொண்டமேறகாநாடடிலவிண்ட-ஆதனூரிலவாழ் (நந்தன்)

இராகம-கமாசு-ஆதிதாளம.
பலலவி

திருநாளைப்போவான-சரிததிரம
தேனிலுமபாலினுமினியதுகணடீா (திருநா)

சிததமுருகிச் சிவயோகிகளுந
காததமிதுவெனறனுதினமபணியும (திருநா)

மேதினிபுகழுமாதனூாவிளஙகவநதமாதவஞசாதனைபெருகிய
பேதமிலாதவனவேதகுருபாநாதனைபபணியும (திருநா)

மனதிலகுற்றமிலலாதவனிநதை வஞசனைமாய்கைசொலலாதவன்
கனவிலுமநினைவிலும சிவபதஙகுருபதங
கருததுறைகளிததிடப பெருததிடவாசனும் (திருநா)

சாதிமுறைமைதவறாதவன்பவ சாகரததிடைமுழுகாதவன்
பூதமாயாதிக ளாகியவுலகம
பொய்யிதுமெய்யிது வலலவென்றறிந்திடும (திருநா)

---

## பெரியபுராணச் செய்யுள்.

விருத்தம்

பகர்ந்துலகுசீர்போற்றும் பழையவளம்பதியாகுந்
திகழ்ந்தபுனறகொளளிடமபொன செழுமணிகடிரைக்கரததான்
முகநதுதரவிநமருஙகு முளரிமலாக்கையேற்கும
அகன்பணைநீாநனாடடு மேறகாநாட்டாதனூா

வசனம்.

கொள்ளிடத்துக்குச சமீபமாகிய உலகமெல்லாம் புகழும்படி
க கீர்த்திபெற்றிருககினற அமராபதி, அளகாபுரிப் பட்டணத்தை

தோற்கச்செய்யும் மாடமாளிகை கூடகோபுரத்தோடும் அணிமாதி சித்திகள் நிறைந்து திரண்டசெல்வத்தோடும வேதவேதாந்த தத்து வஞானமறிந்து சாட்சாத்காரமபெற்ற வேதியரோடு மற்றுமூன்றாவ ருணாசிரமங்களாலே சூழபபட்டு பூலோகத்தி லதிகமென்றுசொலல பபட்ட ஆதனூரென்னும கிராமததுககு வெளியில் நஞசைநிலங்க ளாலே சூழப்பட்டிருககின்ற கடைசாதியர் குடியிருக்குஞ சேரியை க்கொண்டாடிச்சொல்வார். ஏனென்றால், ஸ்காந்தபுராணததில அ ஞசுபோககண்டததிலே சிவபக்தன்குடியிருககுஞசேரியைக கைலா சமென்று வருணித்துச் சொனனபடியால், உபமன்னியபகவானமிக வுங்கொண்டாடிச் சொல்லுகின்றா

சிந்து

பழனமருஙககரையும - புலைப-பாடியதுகூ ரைவீடுதனில், சுரை யோபடர்நதிருககும - அதைச-சுற்றிலுமநாயகள் குலைததிருககும, பரந்தோடிவடடமிடுமெ-இளம-பசசைபபிசிறைதமே விசசைகொண்டு, கோழிகூவுங்கூககுரலும - பாழுங்-கொலலையருகினில வெள்ளெலும் பும், நரமபுங்குவிநதிருக்கும-பல-நெடடிமிதநதிடும குட்டைகளில, நண்டோகுடியிருக்கும - சிறு-நததைதகமடம வலுததிருக்கும, தோ லூருங்கேணிகளில - வெகு-நாலலைபபடுமெவாடை சொலலறியாப், பர்மபோஅடிததிருக்கும் - வயறு-பக்கஙகளிலமெநத நொகநெலும் பும, கிழிதந்தோலநரமபுகளும - அவாக - கீனமிலலை சிறுமீனுலரும. தெருவில்விளையாடிகதொணடு-அவா-தெநதினமபாடுவா சுநதரமாய், இலுபபைமணியரையில - கடடி-இண்டந்தலைகளில பூண்டிருககும, சஙகுதோடுகாதணியும - அவருந-தாவடமேயவாதூவிடமாய், மணி யோதரிததிருபபாா - தெரு-வாசறுபுறநதனிலேசிககொண்டு கொண் டாட்டமாயிருபபாா - கையைக - கொட்டிககொணடு தனககிஷ்ட முடன், மதுவுணடுகெககலிபபாா - பற-ோந்தியமும வெகுநேகதி யுடன், இருக தமபுலைபபாடி-அதில-ஈசன திருவடிநேசமுடன், சரிக் கும்ஒருபுலையா - அவா - சாதிமுறைததவறாதவராம, நநதனாவாபெ யராம்.

வசனம

இவ்விதமாய்க் கடையரிருப்பின வரப்பினிலவாழ்வார் இபப ரிவுடன் சிவனகழறகேவிளைந்த வுணாவோடும் மடகாரபதி னூறு புலமையாண்ட தொழிலனுயத்திலொப்பிய நநதனுரென ஒருவரு ணடாயிருககும் புலைப்பாடியில பரமசிவன பாதாரவிநததில மிகு நத அந்தரங்கம பொருநதினவராகியநநதனுர் மிகுநதபததி புரிந்தி ருநதார் அச்சுடன நேரமில் விழுநதாலும பிள்ளைப்பூசசிமே லொ

ட்டாது அத்தன்னைமபோல், எத்தனைகாரியமிருக்கினும் முத்தியளிக்குங் கர்த்தனாகிய அதனை தனது சுத்தமாகிய சித்தத்தில நித்தமும வைத்து உத்தமபத்திபெற்றிருந்தார் மற்றதுமறந்தார் உற்றதுமுணர்ந்தார் இப்படியெல்லா மிருந்தும், நல்லகுண மில்லாமற்போனால், உலகம பொல்லாங்கு சொல்லுமல்லவா

சிந்து.

இவர்வெகு - நல்லவராயிருந்தத் தொல்லுலகில, அவமேசிவனடியார்

வசனம.

என்று ஆச்சரியங்கொண்டு சொன்னபடியினாலே, இவரைப்போல பத்திமானாகத்தில இருந்தவராயிருந்தவர் ஆரிருக்கிறார் ஆரிருப்பார் என்று இணைசொல்லப்போகா தணைகடந்த பரமசிவபத்தனென்று சொல்லப்படும.

சிந்து

அவர்க - காருமெதிரில்லாத தாரணியில, கோடிகோடிசென்மங்களோ - முன்னம - குற்றமறச்செய்த நற்றவமோ, அவதாரமானதுவோ - ஈசன்-அன்புபுரியும்பேரின்பசுகம், கொள்ளைகொள்ளவோ பிறந்தார - திருக - கோவிலவலஞ்சுழன் றுவனுடன், செய்யும்பணிவிடைகள.

## பெரியபுராணச்செய்யுள்.

விருத்தம

ஊரில்விடும் பறைத்துடவை யுணவுரிமையாகக்கொண்டு
சார்பில்வருந்தொழில்செய்வார் தலைநின்றார் தொண்டினறை
கூரிலைய முக்குடுமிப் படையண்ணல் கோயிறொறும
பேரிகையே முதலாய முகக்கருவி பிறவினுக்கும
போர்வைத்தோல் விசிவாரென் றினையனவும் புகலுமிசை
நேர்வைத்த வீணைக்கும் யாழுக்கு நரம்புரிமையால்
சேர்வுற்ற தந்திரியுந் தேவர்பிரா னர்ச்சனைக்
காவத்தினுடற் கோரோசனையுமிவையளித்துள்ளார்

வசனம

இந்தப்பிரகாரம நந்தனார் சிவஸ்தலங்கடோறும போய்ச்சுவாமியைத் தோத்திரஞ்செய்கிற தெப்படியென்றால்,

இராகம-காம்போதி-ஆதிதாளம

கண்ணிகள

செந்தாமரையாளருகோராடை களுங் கோமணமுஞ்
செறிந்தமாதாக ளாட்டம-சிறந்தவேளார்
சுந்தரத்திராணுவாதி [illegible] கோரோசனைமற
நீந்தொழிந்தார [illegible]

சிவசரவணமூர்த்தி ஞானசம்பந்தரென்த
திருவவதார மாக-வந்தசீர்காழி
புவனரட்சகனதிரு நீலநாயகியையேத்தி
பூரித்தாரவெகு வாக
ஒருபொற்புரமதி லோங்கியமாயூரத்
துவந்தவிஸ்வநா திசரை-மிகத்தொழுது
ஒருமுகக்கருவிக்கு தோலநரம்பினைவைத்தந்தா
ருலகிற்புகழுவந்தன பெயரை
உமையொருபாகத்தி லுயர்ந்தபரன்றரும
னொருபசுவுங்கன ருக-மாயவேடனை
சமைந்துமயினமனுநீதிசோழன் றனக்குக்காட்சித்
தந்தவாரூராசென்றானை பார்க்

வசனம்

பின்னும் நந்தனார் தாம்செய்யுந் தருமமேதென்றால், இவர் புலையரானபடியால் சிவஸ்தலங்களுக்குப்போய் வீதியைச்சுற்றி சந்நிதியில்வந்து தடிவிழுந்ததுபோல உடலபணியப் பணிந்து புழுதியில் புரண்டுமயிர்சிலிர்ப்பக் கண்ணீர் ஒழுக வாய்குளறி உரைதடுமாறி ஒருதரம் கூத்தாடி தொழுது எக்களித்து நெக்களித்து ஒருதரஞ் சிரித்து ஒருதரம்வெறுத்துச்சுகமறந்து அகமிழந்து அனல்கண்டமெழுகதுபோ லுள்ளமுருகி ஆனந்தவெள்ளம்பெருகிகளளங்கருகிசிவனே சிவனேயென்று வாய்வலிக்கப்பேசி கைவலிக்கக்கொட்டி கால்வலிக்கக்கூத்தாடி நிறபவரொருமுகூர்த்தஞ் சித்திரத்திலெழுதும் பதுமைபோல் கண்ணிமையாமல வாயசையாமல் கைகாலசையாமல் காலெழாமல் வாயசையாமல் ஓசை தெரியாமல அலையடித்தோய்ந்த கடல்போலநிறைந்து தன்னை மறந்திருப்பார் தன்னினைவுவந்து பரவசந்தெளிந்து ஈசனைப்பணிந்துகொண்டு வந்தபணிவிடை செலுத்தக் கோவிலார்கேட்கக் கும்பிடுபோட்டுச் சொல்லுவார்

இராகம்-ஆனந்தபைரவி-ரூபகதாளம்

**பல்லவி.**

வாரிருக்குதுதோலிருக்குது வாங்கிக்கொள்ளுவீரே-மத்தளங்கள்
பேரிகைக்குமவீணைக்குமநல்ல விறுக்கிக்கட்டுமிசை வாரிருக்

பேரிருக்குதுபோதுஞ்சிவன பெருமையைக்கொண்டாடி தினமும்
சிறுநைகின்றதில்லைப்பதியில் சேருதற்குபாயந்தேட வாரிருக்

சிறியவனுன்சாதியொன்று மறியாதவனேழை-சிவ
பெருமானுக்கடியேன்செய்யும பணிவிடையிது வாரிருக்

வசனம்

அன்பின்மிகுதியால் சிவலோகநாதனைச் சேவிப்போமென்று நெடுநாளாய்ச்சொல்லி நிச்சயஞ்செய்த நந்தனாருக்கும் பறையர்களுக்குமுண்டான வாக்குவாதம்

அவர்கள்-தவஞ்செய்யுஞ்சடங்கிதுவல்லவோ பறையர்கள் செய்தால் பாவமேயென்றார்

நந்தன்-தெருநின்று நாமிருந்து போவோம் வாரும் வாருமென்று வருந்தியுமழைத்தார்

அவர்கள்-பொறும்பொறுமிது புண்ணியமல்ல ஏரிக்குப்போவோமென்றிவரையுமழைத்தார், சேரியைநீங்கியங்குச் சிலதுபோவந்தார்

பதினொருபேர்கள் பண்புடன்வந்தார் நந்தனைமாரிபோல ஞானமாக கமபொழிந்து, தவமுனிபோலே தானங்கேநின்றார்

அவர்கள்-சிவலோகநாதனைச் சேவிப்போமென்றார் நந்தன் வெறுங் கையோடே போகலாகாதென்று

வாருடன்தோலும்வரிசையாய்க்கொண்டார் அவர்கள் சேரியிலுள்ள சிறிதுவென்றார்

நந்தன்-வந்தபேயருக்குப் பத்திபெருகவே நெற்றியில் நீறிட்டார்

அவர்கள்-சத்தியந்தானென்று மெத்தவுங்கும்பிட்டார்.

இராகம்-வராளி-சாபுதாளம்

இவர்—சிங்காரமானபள்ளுபாடினார்
அவர்—அங்கங்குளிர்ந்துகொண்டாடினார்
இவர்—கோரோசனைப்பையையெடுத்தார்
அவர்—தாராளமாயவாரிக்கொடுத்தார்
இவர்—சிவமந்திரஞ்சொல்லிச்சேவித்தார்
அவர்—தவமிஃதேயென்றாச்சரித்தார்
இவர்—ஆசைப்பெருங்கடல்தாண்டினார்
அவர்—ஓசைப்படாமலேவேண்டினார்
இவர்—அளவில்லாதானந்தமடைந்தார்
அவர்—அளவில்லாக்காட்சிபெற்றிருந்தார்
இவர்—திருப்புன்கூரீசனைப்பாடினார்
அவர்—விருப்பமோடிவரைக்கொண்டாடினார்

வசனம்

இப்படி எல்லோருங்கூடிச் சிவனை அடிக்கடிவணங்கி அரகரவென்றுரைத்திடுஞ்சத்தம் பரமனையறிவார், இப்படி நந்தனார் பதினொருபேர் பறையரோடு திருப்புன்கூர் வந்துசேர்ந்தார்

சவாயி

நலம்வந்துவீதி வலம்வந்துகண்கள்
சலம்வந்துசோரும் பலம்வந்ததெங்கள்
குலஞ்சுத்தமாச்சு மலம்வெந்துபோச்சு
நலங்கண்டோமென்று நிலங்கொண்டுநின்றார்

வசனம்.

அந்தத்தலத்திலே நந்தி மிகவும் பெரிதானபடியினாலே சிவலிங்கதரிசனஞ் செய்வதற்கு நந்திமறைந்திருப்பதால், நந்தனார் துயரமடைந்து சொல்லுகின்றார்.

இராகம்-சங்கராபரணம்-ஏகதாளம்

கண்ணிகள்

அரகரா திரிபுராந்தகஜீவாதரவெங்கள்
    அம்பிகையொரு — பாகா
நிரந்தரமாயெள்ளுளெண்ணைபோலவிருந்து
    நினைப்பவர்க்கருள் — போகா
வெள்விடைமேல்வரும்விமலநமசிவாய
    விளங்குமவேத — முடிவே-நால்வர்க்குத்
தெள்ளுறச்சிவஞானபோதமளிக்கவந்த
    சிறந்தமெய்த்தவ — வடிவே
மானுமழுவுந்தமருகவாகுவலயமும்
    மருவுஞ்சூல — பாணி-எளி
யேனுங்காணத்தரிசனைதரவுமையுட
    னெழுந்தருள்வீரிங்கு — தோணி
மன்னுஞ்சந்நிதிமுனமருவுமிடபதேவா
    மறைந்திருக்கநினைக — காரணனே
என்னவினைசெய்தேனோகண்பெற்றபாவந்தானோ
    இதயத்திலமகிட்சி — பூணேனே

சவாயி

சிவலோகநாதன திருச்சந்நிதானம
மலையாகிநந்தி மறைத்திடுகிங்கே
பலகாலஞ்செய்த பாழ்வினைகுவிந்து
மலையாகியிப்படி மறைத்ததோவென்றார்

வசனம்

என்று சொல்லிய நந்தனார் பின்னுஞ் சொல்லுகின்றார்.

இராகம்-தேசிகதோடி-ஆதிதாளம்

பல்லவி

வருமறைந்த திருக்குதே-மலைபோலே
ஒருமாடுபடுத்த திருக்குதே வழி

பாவிப்பறையனிந்தவூரில் வந்துமிவன்பாவந்தீரேனோ உந்தன்
பாதத்திலசேரேனோயேறேனோசிவலோகநாதாமாடு வழி

தோடியிலநின்றுதெரிசித்தநாளும்போதும்கோவிலவரமாட்டேனே
ஐயே ஓரடிவிலகினாலபோதுமங்கேநின்று
உற்றுப்பார்க்கசசற்றேவிலகாதோமாடு வழி

வசனம்

இப்படி நந்தனா தரிசனங்காண ஓயாமல யனலுருந்துமபோது
சுவாமி நந்தனார்மீதிரங்கி நந்தியை விலகசசொனனா

---

## பெரியபுராணச்செய்யுள்

விருத்தம்

சீரேறுமிசைபாடித்திருத்தொண்டர் திருமாயி
னேரேதுமபிடவேணடுமெனநினைந்தாககதுநோவா
காரேறுமெய்யிறபுனகூககணனுதலார் திருமுனபு
பேரேறறையிலகவருட்புரிந்தருளிபபுலபபடுத்தா

இராகம்-தூககடா-ரூபகதாளம

ஒருநாளுமவாராதபததன் திருநாளைபபோவாரெனுஞ்சித்தன்
உலகெங்குமபிரசித்தமகனேடு ஒருங்க உலிரும் தசுகுறறம

இராகம அடாணசதோணி-ரூபகதாளம

பலலவி.

சற்றேவிலகியிருமபிள்ளாய் சந்நிதானமறைக்குதாமசீ சற்

அநுபல்லவி.

நற்றவமபுரியுநமபிட திருநாளைப்போவாரவந்திருக்கிறார் சற

சரணங்கள்.

சாதிமுறைமைபேசுறான் தன்னையிகழ்ந்துமேசுறான
கோதிலாதகுணமுடையோன் கோபங்கொண்டாலதாளமாட்டோம

வேதகுலத்தைப்போற்றுறான் விருமபிவிருமபியேற்றுறான்
பூதலத்திலிவனைப்போலே புண்ணியபுருஷனொருவனில்லை சற்

பத்தியில்கரைகண்டவன் பார்த்துபார்த்துவுண்டவன்
சித்தங்குறையில்நமதுசெல்வமமுற்றுஞ்சுறையுந்தபவுசெய்து சற

வசனம்.

இப்படி சுவாமி சொல்ல நந்தி விலகினார்

தருக்கடா

நந்தியுமாவிலகிநின்றார் தன்சாமிமனதைக்கண்டார்
இவன் நல்லபக்தனென்றார் அடங்காதவெட்கங்கொண்டார்

இராகம்-சாவேரி-ரூபகதாளம்

பல்லவி

மற்றதெல்லாமபொறுப்பேன
முதலிலேயுமகொடுப்பேன — மற்ற

பத்தனுங்குற்றஞ்செய்தா
லதைப்பொறுக்கமாட்டேன் — மற்ற

திடுக்கென்றவரைத்துடிக்கப்பேசி
அடிக்கப்பொறுக்கமாட்டேன — மற்ற

பசிக்குதென்றுவருகையிலொருவன்
புசிக்கப்பொறுக்கமாட்டேன — மற்ற

வசனம

இப்படி சுவாமிசொல்லும்போது நந்திமனதுகலங்கி தூரவிலகி நின்றார

நந்தன சிந்தைகுளிர்ந்து அளவில்லாத ஆனந்தமடைந்து குதித்தார கெக்கலித்தார கொண்டாடினார துதித்தார திருவடியுள்ளே பதித்தார வெகுநேரம் [illegible] பாவித்தார.

கடுக்கா

குதித்தார்கெக்கலித்தார் உள்ளங்களித்தார
பள்ளுபாடித்தார்கண்ணீர்வடித்தார பற்களைக்கடித்தார
ஒருதரந்துடித்தார இருதரமடித்தார
இப்படிதரிசனஞ்செய்தார் நந்தனார்தரிசனஞ்செய்தாரே

தருக்கடா-ஆதிதாளம

சட்டமாகசந்நிதானங்கண்டுநடை — தட்டினார்கைகொட்டினார்
அஷ்டமூர்த்தியொருவருக்குமென்று — கூத்தாடினார்பண்பாடினார
கஷ்டமானசமுசாரசாகரம் — தாண்டினார்மெய்வேண்டினார
இஷ்டதெய்வசிவலோகநாதனை — எண்ணினாருள்ளநண்ணினார்
மட்டிலாதசந்தோஷங்கொண்டுதான் — பட்டபாடுகளைப்பேசினார
சென்மங்கெட்டதென்றுதவனை — யேசினார்
இஷ்டமானதன்சனங்களோடு அவர் — கட்டிமுத்தமிட்டுலாவினார்
சிங்கக்குட்டிபோலவே — தாவினார்.

இராகம்-கலியாணி-அடதாளம்.

பல்லவி.

தெரிசனஞ்செய்தாரே நந்தனார் தெரிசனஞ்செய்தாரே

அநுபல்லவி

தெரிசனஞ்செய்தார் தேனமழைசொரிந்து
வரிசையுடன் அவர் வாழி வாழியென்று (தெரிசனஞ்)

சரணங்கள்

குதித்துக்குதித்துக் கைகளைக்கும்பிடுபோட்டுத்
துதித்துத்துதித்துத் தன் துன்பங்கள் தீர (தெரிசனஞ்)

போற்றிபோற்றியென்று பொன்னடிவணங்கிப்
பார்த்துப்பார்த்துப் பரமானந்தங்கொண்டு (தெரிசனஞ்)

அச்சம்மறந்தவர் அறிவிழந்தார்
இச்சைமறந்தவரே நாரமாய நின்று (தெரிசனஞ்)

இராகம்-அபுரூபம்-ஆதிதாளம்

பல்லவி

சம்போ கெங்காதரா சந்திரசேகர ஹர

அநுபல்லவி.

அம்பலவாணரே ஆதிமை நாளரே
அடைக்கலமென்றுநம்பிவந்தேன் ஆதரிப்பதுன்பாரம் சொன்னேன்

சரணங்கள்.

தாயுந்தந்தையுநீ உன்னைத்தவிர வேறே யொருவருமில்லை
மாயன்கோபாலகிருஷ்ணன்பணியும் மலரடிபணிந்தேன் பிறவியைத்
[தீரும் (சம்போ)

வசனம்

தெரிசனம்பண்ணியபின்பு கொண்டுவந்த பணிவிடைசெலுத்தி அவ்வீதியில் மட்டையூறுங் குட்டையைக் குளமாய் வெட்டவேணுமென்று விசாரமுற்றார். சுவாமி இதையறிந்து நாளைப்போவாராலே குளம்வெட்ட தாளம்போகாதென்று தன்பிள்ளையை ஆளாகப் போகச்சொன்னார்.

துக்கடா

மாளாப் பிறவிபோக்கும் பிள்ளையார் வந்தார்
நாளைப்போவார் நீராடப்பா வென்றார்
பிள்ளையார் நானுன்றுணைப்பாவந்தே னென்றார்
நாளைப்போவார் குட்டையைக்குளமாய்வெட்டிவே ணென்றார்
பிள்ளையார் வெட்டிமுடித்தார் குளமாய னார்

நாளைப்போவார்-ஆமெத்தம்மட்டுமெட்டு மென்றார்
பிள்ளையார்-குளம்வெட்டுவெட்டுவே னென்றார்
நாளைப்போவார்-அறப்பமாய்ப்பதக்குநெல்லைக் கொடுத்தார்
பிள்ளையார்-அப்பனேயிதுபோதும்போதுமென் றுரைத்தார்
நாளைப்போவார்-களித்துநிருவிகற்பமா யிருந்தார்
பிள்ளையார்-குளத்தைவெட்டுதற் கிசைந்தார்

இராகம்-மோகனம்-ஆதிதாளம்

பல்லவி

தடாகமொன்றுண்டாகிறது-கணநாயகா
தடாகமொன்றுண்டாகிறது

சடாமகுடதரன்-சாம்பவி யுடன்வர
சகலமுனிவர்பனத்-தாமரையு மலர
கூட்டமாகக்குகன் கணபதியுடன் மன்ன
காதலாலெவருநதன்ன போதயனுசிதமென்ன தடாக

சரணங்கள்

செந்தமுலாவியதாமரைப்பூத்து கதிக்க-மிருத்திடுஞ்சேர்
கணைடைவாதுருவைக்கணங்கு குதிக்க
சுந்தரமிகுந்தடாறமைவசபு முழுதிலுரு சூழ
மசாமசூரியர்களசுகமுடனவந்து தாழ
விந்தையுடனே பலவேள்வியந்தணர் செய்ய
விளங்குஞ்சங்கெனமுய்யகளங்கமில்லாமற் றுய்ய தடாக

ஓதிடுவான தியானந்தான்மிக காண-ஆம்பல்மலர்ந்து
ஓதிமமுங்குறுகினகுலமுமனதிர காண
சோதிமருவுந்தேவ-தாருநிழலுங் கொடுக்க
சுரபிக்கடும்பையாறுமசூழ்ந்து அங்கே அடுக்க
மாதலாக்கூழலார்-மகிழ்ந்து அங்கே நீராட
வல்வினைகளுமவிட்டோட-எல்லவர்களுங்கொண்டாட தடா

வாசனைதங்கியமல்லிகைமுல்லையின் சாலை-சந்தனச்சாலை
வாழைபலாக்கமுகுங்கனமாமலர்ச் சோலை
ஆசையாகமயிலழகுறவே நடிக்க
அருமறைபூசுராக ளனுதினமும் படிக்க
தேசுலாவுந்திவ்யத் தீர்த்தமாகுமென் றெந்த
திசைதேவர்களுமுந்த இசைநர்த்தனர்களு சொந்த தடா

நாளைப்போவார் நிஷ்டைகலைந்து பார்த்தார்
குளம்வெட்டியிருக்கவுள மகிழ்ந்தார்
பிள்ளையாரிருக்கக்கண்களிற்கண்டார்

வசனம்.

இதெல்லாஞ் சிவன் செயலென்று சந்தோஷங்கொண்டு முன் போலவே கோவிலை வலமவந்து தன்னுடனவந்த பதினருபோகளு டன் ஆதனூர்வந்துச் சேர்ந்தார்.

---

## பெரியபுராணச்செய்யுள்.

விருத்தம்

இத்தன்மையிற்சாமகிழ பதிபலவுஞ்சென்றிறைஞ்சி
மெய்த்த திருத்தொண்டுசெய்து விரவுவாரமிக்கெழுந்த
சித்தமொடுந்திருத்தில்லைத் திருமன்றுள்சென்றிறைஞ்ச
வுய்த்தபெருங்காதலுணா வொழியாதுவந்துதிப்ப

சிந்து.

பேணிச - சாருந்தொழினமுறையாரும்புகல, திருப்புன்கூர்ச் சென்றானைக - கண்டு-சேவித்திசைபாடிபாவித்தபின், தில்லைச்சிதம் பரத்தைக் - கண்டு - சேவிக்கவேண்டுமென்றுவனுடன், நாளைபபோ வேனென்றாராம.

வசனம்

நந்தனார் திருப்புன்கூர் சிவலோகநாதனைத் தரிசனம்செய்து ஆதனூர்வந்தநாள் முதல் ஊனுறக்கமுதலானதும விட்டார், தில்லை யம்பலம் திருச்சிற்றம்பலமென்று சொல்லத் தலைப்பட்டார், சேரியி லுள்ள பெரியோர்களைக் கூப்பிட்டார், வணங்கிக்கும்பிட்டுச் சொல லுவார்.

இராகம்-பியாகு-ஆதிதாளம

பல்லவி

சிதம்பரம்போவேநான்-நாளைச-சிதம்பரம்போவேநான

அநுபல்லவி

சிதம்பரம்போவேன் தேறிதெளிவேன
பதங்களைப்பாடிப்பார் புகழ்தில்லைச  சிதம்பரம்

சரணங்கள

ஒருந்தாருசொன்னா லுலகங்களுய்யு
திருவிணைப்பயனில்லை எந்நாளும  சிதம்பரம்

பாதிராத்திரியில பன்மறையோர்தி
வேதியர்போற்றிவிளங்கிய தில்லைச்  சிதம்பரம

திறமொன்றறியாத் தீங்குகள்செய்யும
பறையனாய்ப்பிறந்த பாவங்களைத் துலையச் சிதம்பரம்

வசனம்

நாளைப்போவார் தனக்குத் தெரிசனங் கிடைக்கவேண்டியதற்காக கற்பகப்பிள்ளையாரை வேண்டுதல்

விருத்தம்

காலனுடல்பூமிபடச்சாய்த்திடுவானசெங்கமலக்காலைத்தூக்கி
கோலமுடனடனமிடுந்தனிமன்றுள்நாயகனேகுற்றந்தீரப
பாலிக்கும்படியெனக்குன்னருளபுரிவா யென்றுநறபழங்கள்வைத்து
மேலைக்கோபுரவாயிற்கற்பகத்தைச்சிந்தையுள்ளேவேண்டுவாரே.

வசனம்

நந்தனார் சேரியிலுள்ள புலையர்களை அழைத்துக்கொண்டு சிதம்பரம்போய்த் தரிசனம் பண்ணவேண்டுமென்று ஆசையுற்று பகதிமார்க்கங்களைச் சொல்லுகின்றார்

இராகம்-மாஞ்சை-ரூபகதாளம்

நாளைப்போகாமலிருப்பேனோ-இந்த
நாற்றநரம்புமின்னஞ்சுமப்பேனோ-நான்
நாளைப்போகாமலிருப்பேனோ-இந்த
நாறுமுடலைக்கண்டுகளிப்பேனோ-நான்
நாளைப்போகாமலிருப்பேனோ-இந்த
நாளைவீணுக்கழிப்பேனோ-நான்
நாளைப்போகாமலிருப்பேனோ-இந்த
நமனார்கைக்கஞ்சியோடியொளிப்பேனோ-நான்
நாளைப்போகாமலிருப்பேனோ-சிவ
ஞானத்தைப்பாராமலிருப்பேனோ-நான்
நாளைப்போகாமலிருப்பேனோ-இந்த
நாட்டிலிகழுஞ்செனமமடைப்பேனோ-நான்
நாளைப்போகாமலிருப்பேனோ-தில்லை
நாதனைக்காணுமல்புசிப்பேனோ-நான் (நா)

ஆநந்தக்களிப்பு.

காணாமலிருக்கலாகாது பாழுங்
கட்டைக்கடைத்தேற வேண்டியிருந்தால் காணு
முத்தியளித்திடும பாதம்-தில்லை
மூவாயிரம்பேர்கள் பூசிக்கும் பாதம

கள்ளடாநம தில்லறவாழ்க்கையைத
தள்ளடாநநதன் சொல்லுறுதியெனறு
கொள்ளடா தில்லை யமபலததாண்டவன்
பள்ளடாவென்று பாடிககூத்தாடியே வாருஙகள்

வசனம்

இபபடி வாருங்களென்றழைக்கப புலையர் வராமலிருக்க நநத னர் நலலவார்ததைதசொலலிப பறையரை சிவநாமததைதச சொலலச சொன்னா

## இருச்சொல்லலங்காரவாக்குவாதம்.

நநதனர் - தில்லையமபலமெனறுசொல்லசசொன்னர்
புலையா - கள்ளபபேசசெனறுமௌளசசொன்னா
நநதனர் - சங்கராவென்றுசொல்லச்சொனனர்
புலையா - இங்கேவாவென்றுநிறகச்சொன்னா
நந்தனா - சறறேயாகிலுஞசிவனை ததியானமபண்ணெனறார்
புலையர் - கூத்தையோடுபாலைபானமபண்ணென்றா
நநதனா - திருசசிற்றமபலமென்றுசெபிக்கசசொன்னர்
புலையா - வெறுசசகமபளமென்றுரைககசசொனனா
நநதனர் - சேரியில்நல்லகாரியமீதென்றா
புலையா - ஏரியிலநல்லமாரியீதென்றா
நநதனா - விட்டநாளநினையாம லெட்டுநாளமறவாமல
நிஷ்டைபணணுதசென்மம நஷ்டமெனறா
புலையர் - விடடவிரைமுளையாமல நட்டபயிர்பலியாமல்
கெட்டுதானல்கிராமம நஷ்டமெனறா
நநதனா - உஙகளபுலைததனமைபோகுமெனறா
புலையா - எங்களைக்கெடுததாயோபாவியெனறா
நநதனர் - தேவாதிதேவனைத்தெரிசிப்பீரெனறா
புலையர் - பாவாடைராயனைபபாவிபபாயென்றா
நநதனர் - அனததாளுமீசனுககன்புசெய்யென்றா
புலையா - இனத்தாரைநொநதவர்க்கின்பமேதெனறா
நந்தனா - தினமுஞசிவனைப்போறறிககளிபபோமென்றா
புலையர் - பதரைத்தூற்றிநெலலையளப்போமென்றா
நந்தனா - பெண்ணுசைபொன்னுசைவிடுதலேநன்றும
புலையர் - என்னாளுமுன்னேகெடுதலையுண்டாம்
நநதனா - அப்பனேநிஷ்டைமுடகாணிருபபேனென்றார்
புலையர் - கபபலோட்டியகடன்கொடடைதூற்றிராதென்றா

நந்தனர் - பூசத்திருநாளில்போய்வருவோமென்றார்
புலையர் - பேசத்தெரியாதுபேயாநீபோவென்றார்
நந்தனர் - அழுதுமுறையிட்டாலம்பலத்தேகேழ்க்குமென்றார்
புலையர் - உழுதுபயிரிட்டாலுள்ளபடிவிளையுமென்றார்
நந்தனர் - சித்தமெல்லாமம்பலத்தேசென்றுதேடுதென்றார்
புலையர் - பத்தியெல்லாம்வேறுபட்டுப்பறந்துபோச்சுதென்றார்
நந்தனர் - குற்றாலத்தீசனைக்கூவீரென்றார்
புலையர் - கைத்தாளம்போட்டுக்கத்துவீரென்றார்
நந்தனர் - தாண்டவந்தெய்வமேதந்தெய்வமென்றார்
புலையர் - தூண்டிவீரப்பனேதொழுந்தெய்வமென்றார்
நந்தனர் - இஷ்டப்படிநடக்குமீசனேகதியென்றார்
புலையர் - கஷ்டப்படமாட்டோமகச்சாதேபோவென்றார்
நந்தனர் - கொண்டாடிதெய்வத்தைக்கொள்ளுவீரென்றார்
புலையர் - பெண்டாட்டித்தெய்வமேபெருந்தெய்வமென்றார்
நந்தனர் - நலத்தைக்கொடுக்கவந்தாற்குருவென்றார்
புலையர் - குலத்தைக்கெடுக்கவந்தகோடாலிக்காம்பென்றார்.
நந்தனர் - பலவழக்கம்நானறிவேன்பறையரேயென்றார்
புலையர் - குலவழக்கமறியாதகுருடாபோவென்றார்
நந்தனர் - காக்கறுப்பேன்சிவனைநவிலுவீரென்றார்
புலையர் - மூக்கறுப்பான்கதையைமொழிந்தீரேயென்றார்

வசனம்

நந்தனர் பெரியோருடைய அனுஷ்டானத்தைப் புலையர்களுக்குச் சொல்லுகின்றார்

வேறு

நந்தனர் - சிவனேதெய்வம் சிதம்பரமேகயிலாயம்
தவமேபெருமை தானசம்பிரதாயம்
புலையர் - சேரியேசொர்க்கம் எரியேகயிலாசம்
மாரியேதெய்வம் மதசம்பிரதாயம்
நந்தனர் - படிப்பதுஞானம் பார்ப்பதுமூலம்
குடிப்பதுமதிப்பால் குலசம்பிரதாயம்
புலையர் - பிடிப்பதுநண்டு புசிப்பதுஇறைச்சி
குடிப்பதுகள்ளு குலசம்பிரதாயம்
நந்தனர் - பாழைக்கடப்பார் பரவெளிதாண்டி
கோழையறுப்பார் மூலசம்பிரதாயம்

புலையர் - ஆழத்தில்குளிப்போம் அருங்கோடைவந்தால்
கூழைக்குடிப்போம் குலசம்பிரதாயம்

நந்தனார் - ஆசையைப்போக்கி ஐம்புலனைச்சுட்டு
மாசற்றவாழ்வு மதசம்பிரதாயம்

புலையர் - பூசைகள்புரிவோம் பொன்னேருழுவோம்
கூசாமலவாழ்வோம் குலசம்பிரதாயம்

நந்தனார் - மையத்திலாடி மனக்கயிறுபூட்டி
வையகத்திலிருப்பார் மதசம்பிரதாயம்

புலையர் - கையிலேகலையம் காலிலேசேறு
பையிலேபாக்கு பறையசம்பிரதாயம்

வசனம்

சிவபத்திபண்ணினால் அணிமாதிசித்திகள் அடையலாமென்று நந்தனார் சொல்லுகின்றார்

இராகம்-நீலாம்புரி-சம்பைதாளம்

அஷ்டமாசித்திகளைப்பெறலாம்-தில்லையி
லானந்தக்கூத்தாண்டவன் கோவிலைக்கண்டு
இஷ்டமுடன்வீதிவலம்வந்து-அவன்
இணையடிதொழுதாக்கினிப்பிறப்பில்லை
வாருங்கள்வாருங்கள்சொன்னேன்-நீங்கள்
வாயாடாதேயோடி வருவீரென்முன்னே
கருமணிபிச்சோலைபோதும்-உங்கள்
கள்ளவேஷமெங்களுக்குள்ளேகிடையாது
பருகுவதுகூழ்க்கஞ்சிபோதும்-வாய
பதறிவார்த்தைகளபேசிப்பசப்பாதேபோடா

வசனம்.

நந்தனைப்பார்த்துப் பறையர் நீ சொன்னபடி கேட்பதில்லை எங்கள் உண்மையறியாமல் நீ மயங்காதேயென்று சொல்லுகிறார்கள்

ஏசல்

புலையர் - பார்ப்பாரதெய்வமது பலிக்காதுபறையரைக்
காப்பாற்றமாட்டாது கைவிடுமென்றார்

நந்தனார் - பார்ப்பார்பறையரென்று பாராதிபரிதிபோல
காப்பாற்றுமல்லவோ கண்டறிகிலையென்றார்

புலையர் - அடுக்காதவார்த்தையை, அலலுமபகலோதியே
பிடிக்கிறாய்பிடிவாதம் பேசாதேயென்றார்

நந்தனார் - கடுக்காயைத்தின்பாரோ கன்னலதுபோலே
கொடுக்காததானாலும் கொள்ளுவீரென்றார்

புலையா - பித்தனென்றுசொலலுவார் பேருலகிலெல்லோருஞ்
சததியமிதல்லவோ தள்ளுவீரென்றா

நந்தனா - பிததனாயிருந்தாலும பிறவியறுத்தனேவர்ககும
முததிகொடுககும்நலல மூாததியவரெனறா

புலையா - இததனைநாளுமிங்கே யிலலாதவாாததையை
கற்றுவநதுமென்ன காரியமோவெனறா

நந்தனா - இததனைநாட்செனறு ஈசனடிததாமரை
பததிசெய்பவரும பாககியமீதெனறார்

அகவல

பாக்கியமீதெனறு பரமசிவபததி
யாக்கஙகளெல்லாம் வரிசையாயததிரட்டி
எடுததுரைசெய்வார யீனமானசாதி
பிடிததறியாமல பேசுவாரன்றோ

விருததம்.

வககனைககாரநநதா வாயபடப்பேசவேணடாம
சககரையபோலேபேசிச சாதிததுக்கண்டாயனறோ
பககுவகாலமவநதால பரமனார்திருநாமநதான்
சககரையபோலேதானறுஞ் சாதிப்பார்முத்திதானே

வசனம்

புலையாகளனேகரானபடியால பலவிதமாகச சொல்லுகிறாாகள்.

ஏசல்-இராகம்-புனனாகவராளி-ரூபகதாளம்

புலையர் - ஆண்டிபபரதேசி யாகரவென்றவா
வேணடுநதெயவமது விளங்காது யென்றா

நநதனா - மூன்றுலகுககிறைமுனனின்றுகைகூப்பி
ஆணடவனேயெனறு ஆசசிககு மென்றார்

வேறொரு புலையா - நாததைபபிடுங்கியே நடவுநட்டாலிநத
சோறறுககவலைவிடுஞசுகமிது வெனறா

நநதனா - கூறறுவனாவநது கூபபிடுமவேளையிலெ
மாத்திரைபபொழுதிலே மனனுயி ரென்றா

நந்தனார் - வாருங்களெல்லோரும் மன்னனைப்போலவே
சேருவோம் தில்லைச் சிதம்பர —மென்றார்

வேறொரு புலையர் } பாலாறுபெருகவே பண்ணையைப்பயிரிட்டு
ஆளாமலேவீணுக் கலைகிறீ —ரென்றார்

நந்தனார் - பாலகிருஷ்ணன்தொழும் பாதத்தைக்கண்டு
நாலாம்பதவியை நாடுவே —னென்றார்

வசனம்

அவர்களில் ஒரு புலையர் உரைத்ததாவது எப்போதும் சிவனைக் கொண்டாடினால் நம்முடைய தொழிலுக்குக் கெடுதலுண்டு புண்ணியமில்லையென்றுசொல்ல, நந்தனார் அதற்குச்சொல்லுகின்றார்

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்

அரகராவென்றொரு குழிநட்டாலங்கலமே — விளையும்
பாவம்-தங்காமற் — றலையும்
சிவசிவாவென்றொரு தரஞ்சொன்னால் — சென்மசபலமாச்சு
புண்ணிய கருமமதுவே — யாச்சு
தில்லையம்பலத் தெரிசனங்கண்டால் — தேவரும்வருந்தாரோ
அந்த-மூவருமபொருந் — தாரோ
அடிமைக்காரத்தொழில்செய்வது — துன்பமாறுமேச்சே
சென்மம்-போனாலும் — போச்சே

வசனம்

நந்தனார் புலையர்களைப்பார்த்து, அநேகவிதமாகச்சொல்லி நாளைப்போவேனென்று சொல்லுகின்றார்

சந்து.

நாளைப்-போவேனென்றாராம் - அங்கே-நடுப்பறையாக ளோடி-வந்து, அண்ணே நீபோகாதே - நமக்-காண்டைபொல்லாதவன் வேண்டிக்கொள்ளான், பாப்பாரச் சாதியுண்டே

வசனம்

இப்படிச் சொல்லிய புலையரைப்பார்த்து நந்தனார் சொல்லுகின்றார்

இராகம்-செஞ்சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி

ஆண்டைக்கடிமைக்காரனல்லவே
பா[illegible]டைக்கடிமைக்காரனல்லவே

அநுபல்லவி

மூன்றா[illegible]
ஆ[illegible]திமைக்காரன் — ஆண்டை

சரணங்கள்

ஆசைக்கயிற்றினிலாடிவரும்பசு
பாசமறுத்தவாக கடுமைக்காரன் ஆண்டைக்

தில்லைவெளிகலந்தெல்லைக்கண்டேற்றி
தேறித்தெளிப்பவற கடுமைக்காரன் ஆண்டைக

சீதப்பிறையணிந்தம்பலத்தாடிய
பாதம்பணிப்பவாக கடுமைக்காரன் ஆண்டைக

வசனம்

தன்னையடிமையாகக்கொண்ட வேதியர் சொற்கேளாதவரல்ல அப்படியிருந்தும், பத்தி பண்ணவேணுமென்று பத்திநெறியைச் சொல்லிக் காட்டினார்

விருத்தம்

தவம்பெறுமுனிவர்மெச்சுஞ் சரித்திரங்கொண்டநந்தன்
பவமயுக்கறுக்கவேண்டிப் பகர்ந்திடுஞ்சிவவாக்கியத்தை
அவகுணங்கொண்டபேய ரறிந்திடப்போமோவெல்லாஞ்
சிவன்செயலாகுமமாற செயவதொன்றில்லையென்றார்

வசனம்

திருநாளைப்போவார் அனேகவிதஞ்சொல்லைப் புலையர் கேளாமலிருந்ததினாலே சிவன்செயலென்று நாளைப்போவார் சும்மா யிருந்தார். அந்தச்சேரியில் புலையர்கூட்டங்கூடி மூத்தோனாலே நந்தனாருக்குப் புத்திசொல்லவேணுமென்றெண்ணி அந்தச் சேரியிலே வெகுநாளாகயிருக்கின்ற ஓர்புலையர் வயதுமிகுந்து உடல்தளர்ந்து பல்லுகளுதிர்ந்து தோலுகள் சுருங்கி நரம்பு தெரிந்து முதுகுசரிந்து முழுதுமவளைந்து அங்கம் சொரிபட்டாந்து தினவுமிகுந்து அதனைச் சொரிந்து அந்நீர்வடிந்து அவ்வுடலந்துயங்கி இவ்விதமிருக்கும் பெரியகிழவனுரையனுப்பக் கோலூன்றி கூனிக்குறுகி கோணலாய நடந்துவந்து நந்தனாரைப்பார்த்து கட்டியணைத்து தலைகிமிர்ந்து கண்ணீர் சொரிந்து மாரிலவழிந்து மனங்கனிந்து காதல்மிகுந்து ஒன்றுந் தெரியாதவரென்று நினைந்துபரிந்து ஞாயமறிந்து சொல்லுவான

இராகம்—பியாகு—ஆதிதாளம்

பல்லவி

ஞாயந்தானோ,நீர்சொல்லும்—ஓய்—நந்தனாரே
சும்மாதிக்கடுக்குமோ

சரணங்கள

| | |
|---|---|
| சேரியிலில்லா | வழக்கம்-நீர் |
| செய்துகொண்டுவநத | பழககம-இநத |
| ஊரிலெங்குமநது | முழக்கம-வெகு |
| உறுதியாசசுது | வொழுககம-இது ஞாய |
| சிதமபரமென்கிற | பேசசு-நாங்கள |
| செய்திடுஙகாரியம | போசசு-அது |
| மதமபிடித்ததும்பா | லாசசு-இநத |
| மண்டலப்பறையருக | கேசசு-இது ஞாய |
| பறையருககேது தைப | பூசம-அதைப |
| பாரககவேயுனககு | விஸவாசம்-சிறு |
| பயல்களுககேயுப | தேசம்-நீர |
| பண்ணிவைததெல்லாம | மோசம இது ஞாய |

வசனம

சேரியில பெரியகிழவனனபடியால் சாதி வழககஙகளெலலாம் அறிநதவனாதலால நநதனுககு இன்னமுஞசொலலுகிறான

சிநது

பாபபாரச்சாதியுண்டே - என்ன - பாடுபடு முழக்காமெங்கே, நமக்குந திருநாளோ-அநத-ஞாயமுண்டோ தென்னமாயமிது, வெண் றெதடைசெய்தான்-இவன் - வேடிக்கைதானெனறு நாடிககொண்டே, அறியாதுபோயிருநதார

---

## பெரிய கிழவன் சொல்லிய

விருததம

கழனியைததெய்வமெனசசுற்றிவநது தலைவணஙகிசசாங்குவிநது
உழுதுபரமபடிததுவிரைதெளிததுமுளைகொள்ளநீரோடவிட்டுப
பழுதறவெடடததைககளைபிடுஙகிமடைதிறநதுநீரபாயவிட்டுச்
செழுததிடவேபொஙகவிட்டுககாத்தவராயனைவேண்டுஞ்செய்கைதா
[னே.

இராகம-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

சுவாமிதெரிசனமநாமக்குண்டோ-புலைச
சாதியன்றோவநதநீ யறியாமல

அநுபல்லவி

பூமிதெரிசனமபோதும்போதும வெகு
புண்ணியமேசோறுபோடுமின்ன மொரு சுவாமி

சரணங்கள்

நாத்துநரம்புகளைச்சுமப்பதும் — உழுவதும்
 நஞ்சைவயலைச்சுற்றி — வருவதும்-வளம்பெற
பாத்திகள்கட்டி விரைதெளிப்பதும்பறிப்பதும்
 பாயமடையைத்திறந்திடுவது — மன்றியில் சுவாமி

சேரியிடையிற்குடியிருப்பதும் பதறுகள்
 சிதறத்தூற்றிநெல்லளப்பதும் — பார்ப்பதும்
ஊரைவளைந்தத்தமுக்கடிப்பதும் மதுக்குட
 முண்டுகளித்துநாமுறங்குவ — தன்றியில சுவாமி

ஆண்டைமார்களிடம்பணிவிடைசெய்வதும்
 அருகிலநின்றுகைகட்டிவிடுவதும் — நடுவதுந
தாண்டி நடந்துநெடுங்கோலபிடிப்பதுமளப்பதும்
 தனித்துச்சுடலைதினங்காப்பது — மன்றியில சுவாமி

---

விருத்தம்

சாதியின்முறைமைகாட்டித் தடைபட்டபோதுமென்றா
வேதமாமுனிவராலும் வினவியுங்கண்டாரில்லைப
பேதையாம்புலையருக்குப் பேரின்பநிஷ்டையேதென
முதலாலென்செய்வோமென்றம்பலத்தனுக்கவாரே

வசனம்

பெரியகிழவனைப்பார்த்து நந்தனார் சொல்லுகின்றார்

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்

சிதம்பரதெரிசனங்காணுவிழவிந்தச்சென்மருசபல — மாமோ
 சென்னமரணசமுசாரம்பெருக்கவேசெய்தவினைசள — போமோ
கண்ணாரக்கருத்திருக்கச்சிவனைக்காணுமலகாலங்கழிக்க — லாமோ
 காலபாசநமதருகில்வாராமலகணடுபயந்து — போமோ
இப்படியேபோனுமிருப்போமென்றெண்ணியிருக்க — லாமோ
 இருதயமறிந்திடசெய்திடுங்கன்மங்கள இகழ்ந்துபிரிந்து — போமோ
பின்னுமுன்னுமறியாதமூடர்கள்புத்திகேட்க — லாமோ
 புலையரவரடியிலிருக்கினுமெய்திடும்புண்ணியங்கள் — போமோ
பரமசிவனைக்கொண்டாடவேணுமென்றுபரிந்துபாவி — பார்த்தேன
 பாபஞ்செய்யாக்குப்பலியாதுஅதில்பாடுபட்டுப் — பார்த்தேன

வசனம்.

சேரியிலுள்ள புலையர்களை கூட்டங்கூடி அனுப்பிவைத்த பெரியகிழவனைப்பார்த்து நந்தனார் சொல்லுகின்றார்.

தியெண்ணலாமா, நததிமுத்திதேடலாமா, சுத்தமான பெரியோர்களிடததே சததமபோடலாமா, இஙகேநிததம் நாடலாமா, வியாத்தமான இநதசென்மமெடுத்துஞ் சிததிதேடலாமா, அங்கேபுத்திசெல்லலாமா, அடடா, இதுவெலலாம விட்டுவிடடா, நாதமைதப்பிடுஙகிநடடா, என்தொழிலைததொடடா, தோல்கட்டிய தடியையெடடா, யாருந்திருடாமல பாரா ததிருடா, களததிலடடுடா, காவலகொடுடா, புலலறுடா, மூரடா, வழிதெரியாககுருடா, நான்சொல்வதுநேரடா, இதடா, உன்செய்கையென்று கலைாலெறிந்து, தடியாலடித்து, வாயாலதிட்டிதேள்போலே கொட்டி, இவனொரு ஆள்போலே நின்றான், அவா நாளபோகுதே யெனருர்

வசனம்

நந்தனர், வேதியரைபபார்த்து நீங்களென்னையடிக்கலாம் நானும் அடிபடலாம், தங்களுக்குக் கைநோகுமேயென்று வணங்கிச சொல்லுகின்றார்.

தண்டகம - ஆதிதாளம

பல்லவி

அடித்ததுபோதுமையே-என்னை-அடித்ததுபோதுமையே

அநுபல்லவி.

அடித்தாலுமுங்கள் கைவலி யாதோ
அடிமைவேலைசெயயுமென்னுடன் வாதோ
படிததெல்லாமென்மனதிற படாதோ
பாவியெனககுப்பிணிமேறறெறி யாதோ (அடித்)

நல்லவரேயுங்கள்மனதுபபிர காரம்
நடக்காமலிருநதுமப சாரம
சொல்லதெரியுமோவெனககுப சாரம
சுகிர்தசாமியுங்களாலேயிந நேரம்(அடித்)

வசனம

நந்தனா ஐயருககுத் தலைவணஙகிசசொல்லுவார்

மோகனராகம - ரூபகதாளம்

இலவுகாத்தகிளளை யாசசே-நான்
எடுத்துசசொனனதெல்லாம போச்சே
பறையன்சொல்லுபழு தாசசே-நீங்கள்
பாரப்பாரென்பதுமே லாச்சே
ஏழைச்சொலலமபல மாச்சே-தெய்வ
மில்லாமலெங்கையோ போச்சே

சேரியேசொர்க்கமென் ருச்சே-தில்லைச்
சிதம்பரமென்பது போச்சே
விழுலுக்கிறைத்தாறம்போ லாச்சே-எந்தன்
வேண்டுதல்வீணாகிப் போச்சே
கண்டைக்கண்டிட லாச்சே-நல்ல
காலம்பிறக்காமற் போச்சே

வசனம்.

நந்தனார் பெரியோர்கள் கோபத்தை இனி எளியேன் தாங்கேனென்றுசொல்லுவார்

இராகம்-லாவணி-ஆதிதாளம்.

பெரியோர்சினமடையா ரடைந்தாற் பெருங்கடல்தீயாதோ
பேயன்தாங்குவேனோ இம்மாத்திரம் பிழைபொறுத்தாளுமையே
அல்லும்பகலும்நா னறிந்துமேதா னறியாமலேபோனேன்
ஆசைகொண்டேன்சிதம்பரதெய்வம் மோசஞ்செய்யுதையே
பாவியெனதொடாந்தடித்தாலுமெந்தன் பாழ்வினை தீராதோ
பாதனிலேபோசொல்ல லாகுமென்றோ படைக்கதுபோகாதோ
சிங்கம்பொசிக்கிடும் இரைக்கு இச்சைகொண்டு செந்நாய்தொடலாமோ
சிதம்பரநாதனைத்தொடலாமோ ராகியில சின்னவனானந்தே
இன்றுமசிதம்பரம் போவேனென்று யிங்ஙனேவருவேனோ
இம்மட்டுமேபோது மையேயுங்கள்தய விருந்தாலதுபோதும்

இப்படி நந்தனடியான்வந்த

விருத்தம்

சேரிவந்தவர்செவ்வியவேதியனசினத்தால
காருள்ளடாந்திடுஞ்சோலையினின்றிவனகருத்தை
எருலாவியபரமனறிந்தண்மலரிறைத்து
தீராதியநந்தனும்பிப்படிசெய்தான

வசனம.

நந்தனார் தங்களையருகத்ததலைவணங்கி பெரியகும்பிடுபோட்டு ஒருசோலையிலிருந்து சமாதிபண்ணுவார், தன்னுடைய சரீரத்தைத்தில்லைவெளியிலே கலந்துகொள்வேனென்று வீரவைராக்கியத்துடனே சேரியிலவராமல் தன்னுடைய துயரங்களையெல்லாம் அம்பலவாணருக்கே ஒப்பிவித்து சலுகைகொண்டாடுவார்.

விருத்தம.

வேதியரிப்படிசொல்ல வெந்துமனம்வேறாகி வினையோவென்றி
சாதியிலேயாவமது நீயன்றோபிறப்பித்தாய் சுவாமியென்னை

சோதனையோசெய்கின்றாயெவ்வுயிர்க்கு மவ்வுயிராய்த்தோய்ந்திருக்
ஆதிகுருவலவோநீபாரப்பானுக்குள்ளிருந்துமனுப்புவீரே. [கும

இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம

பல்லவி

ஐயாவுன்னடைக்கலம் பொய்யாகியதேகமடைக்கலம் ஐயா

அததாநானவருவேனோ அமபலததைபபரவேனோ
சறறேயாகிலுஙகாணபேனோ நநதியேயென்செய்வேன ஐயா

விருததம

தாறிலலாதவிப்பிறவியைததாணெடுததஞசி
ஆறுபட்டணற்கீழ்க்குலமாகியிததுன்பம
நீறுபட்டிடுமலலவோதிலலையினின்றால
பேறுபெற்றிடுவேனதற்குயமொருபிசகோ

இராகம்-எதுகுலகாமபோதி- திரிபுடைதாளம்

பல்லவி

ஐயோதெய்வமேயிநதவையாககடிமையானேன்
செய்யாவினைகள்செயதலலவோ
உளளங்களைநதுருகியுயயுமபடிககேட்கில
கள்ளககுமரனலலவோ
ஆலைக்கருமபதுபோலாசசுதஙகமுழுதும்
வேலைக்கிடமுமிலலையே
பாவியெனககோவநதபாரபபானமனதிரஙகான்
ஆவிதவிக்குதல்லவோ
கோவில்குமபததைககண்டாலகோடிவினைகளதீரும்
பாவிக்குககிடையாதுகாண
தில்லையமபலவாணதெய்வமபுலையாககாக
கலலாச்சமையலாசசுதே
பொன்னம்பலவாயுனைபபோறறுமவகையில்லாமல
இன்னமபிறவியேறுமோ
அன்னைதநதையுமநீயென்றாவிபொருளுமநீ
யுன்சநநிதிவரசசெய்வாயே

அறுசீரடியாசிரிய விருத்தம

அடிமுடியொன்றுமிலலாதமபலத்தரசேயுனபால
கொடியனுன்வநதாலென்ன குறையுமோவதனாலநீதி
நடலைசெய்பாரப்பான்கையில நடுஙகவோவிடுததாயென்று
படிமிசைவீழ்ந்தானடிப் பதறுவான்கதறுவானே.

இராகம்-லாவணி-யமுனாகல்யாணி

பல்லவி

செயயுமுபாயமறியேன
அரகரசிவனே தில்லைசசிவனே

பததுவருடகாலமாகவநதுபாாபபாணைககேடடேன
சிததமிரஙகிபோயவாவெனறெருநலல சேதிசொலலக்காணேனையோ
(செய்யு)

பாவிபுலையனாய்ப்பிறப்பேனோயிநதபாரினிலிருப்பேனே
ஆவிதவிககுதேபொனனமபலாவுன னடிககமலங்காணேனையோ
(செய்யு)

பல்லுமுளைத்தநாள் முதலாகயிநதபபாடுபடுவேனே
திலலைநாயகாகனகாவெனறுனை ததேடுமெவகைகாணேனையோ (செய)

நாறபதுவேலியிலயிருககிறதை நடுகவேணுமென்றா
காபபதாருகளைபிடுஙகுவதாரெனறு கடுததபேசககடியேன (செய்)

ஆற்றிலேகுளததிலேவிழுவேனென்னுவதைபபிடிததிழுததிடுவேன்
பாாததினிககிருபைசெயயாவிடிறபறையனபழிவீண். போகாதுசொ
[ன்னேன (செய்யு)

தில்லைசிதமபரததைககாணுவிடி லென்தேகநதரியாது
சொலலிவிடடேனபொனனமபலவாமுனசொானசபைககுவருவே
[னோநான் (செய்யு)

விருததம

கடுவருநதியுமபணிகலினைகவுங்கறறைச
சடிலமேவியபிறைபுனறறரிககவுநதகுமோ
விடுவதில்லையுனனருகினிறறுனெருவேஙகைக
கொடியனவநதினைலெனன தில்லையிறகுறைமோ

விருததம

மாவளா தில்லைமாநகா வீதியுமதிலும
கோவிலுந்திருககூடடமுஙகண்டுகண்குளிரப்
பாவியாகினேன்காயததையேதுககுபபடைத்தே
னாவிதானிருநதுமபரகதியடைநதிலனே

ஆதிநாண்முதற்றவமபெறுமாமுனிககாக
நாதமோஙகவேநாடகமபுரிநதிடுநதன்
பாதமபோற்றியெநநோமுமபணிந்திடுநதன
ஏதநீரவெகஙவிலுமீசனுமவநதார

வசனம்

நந்தனார், தில்லைத் தலத்தைக்காணாத சென்மமிருந்தா லென்ன போனாலென்னவென்று நிச்சயம்பண்ணி மனமுருகிவாடும் வேளையில், கொஞ்சம் நித்திரைபோறகண்டு அந்நித்திரையில் அம்பலத்தே வனவந்து சொல்லுவார்

எதுகுலகாம்போதி

பல்லவி

கனவினிலகண்டாரே-நந்தனார்-கனவினிலேகண்டாரே

மனதிலேப்போதும் வருந்தியடி பணியுங் கனகசபேசனைக் கண்ணிறைகாணுமல-கனவி

நீநடுங்க முனிகள் நானடசசொன்னேனை ஊனமில்லாமனுன னுடையவனகளிக்க மாணிடப்பிறவியி னுனக்கிணையாரபதி மாணில்லையெனத் தில்லை நாதனவந்துரைக்க-கனவி

கண்குல்பகலாயக கனித்துநின்னருளாறு சங்கரனேயென்று சாருநனனிலையால அங்கம்புளகித மாசசுதும் அந்தணா விழகேவந்தேனென்று மீச னுமபுகல-கனவி

விருத்தம்

அறிவுமிருந்தாறறலுடன சிவபெருமானபெயாசொல்லியாறறு நாளில், கறைமருவுமிடா முகன்றனதடிமைவெறியகல்கனவிலவந்து குறையறவேகமுனிகளை நடசசொனனேமுனக்கு விடைகொடுக்கே னெனற, மறையோரும்வாகக்குரைத்து நீவிரைந்துவாவென்று மனறுடசெனறா

## நந்தனார் கனவில் - நடேசமூர்த்திசொன்ன

வசனம்

நம்முடைய நந்தனாரே உனனிடகமுனிகளை நமது பூதகணங்களாலே நடசசொனனேம வேதியருக்குக்காட்டினுல உத்தாரங்கொடுப்பாரென்றுசொல்லித் தானமபலத்தேசென்றா

• நந்தனார்-நித்திரைநீங்கி வயலகளைக்கண்டு சநதோஷமடைதல

கண்ணிகள்

களையெடாமல்சலம்விடாமல கதிரொருமுழங்காணுமாம்
களிகருதுபயிரிருக்குதுஅதைக கட்டுகடடவேதாணுமாம

பழுதிலாமலேரிகுளங்கள் பளளமேடுதண்ணியாம்
பரமசிவனைப்பணியுநந்தனை பயிரிடுநதிருபபண்ணையாம்
கனவில்வநதுவுருவமாகி கருணைமாரிகண்டவன்
கடுகிநடநதுவேதியரிடந காணவெனறுசென்றனன

விருத்தம்

அய்யரேவாருமென்று அழைத்திடும்நநதனுரைத்
துய்யவேதியருங்கண்டு தொலபுவித்தெய்வமெலலாம்
பொய்யிதுவெனறுகள்ளிட்டபுலையனும்வநதானென்று
செய்யவேண்டியதுசெய்யச செபபுவாஞெபபுவானே

பலவித - இராகம - வராளி - ஆதிதாளம.

## வேதியர் சொல்லுதல்.

நநதாவுனக்கிந்தமதி வநததென்னதநததாரு
அநதரஙகஞ்சொநதமா யிருநததுமறநதுபோய்
விநதையாயநினைநதன்றோ அநதவேளையுநதியிலலை-நநதா

தோடி.

கொல்லைக்காட்டுநரிபோலே பலலைக்காட்டிபேசுவாய்
கல்லைககாட்டிகோபஙகொணடு சொலலைககாட்டியேசுவேன
திலலையென்றுசொனனதெல்லா மிலலையென்றுபோசசுதா
கலலையென்றுஐயர்சொன்ன சொல்லேநீசமாசசுதா
சிததமுநதெளிந்துதா உறறதுவுணாந்துதா
பததியுநதுலைநதுதா கத்தனுமபறந்துதா
சட்டம-சட்டம்-நல்லது-நல்லது மெதத-மெதத-சநதோஷம்

மததியமாவதி

இப்படிஅப்படிசொல்லாதே தப்பெடுத்தடிப்பையா
சொறபடியொபபுதலாகநீ மெய்பபடிநடபபையா
கள்ளக்குமபிடுதளளடா காரியங்கைக்கொள்ளடா
எள்ளுகொல்லைக்காரடா யெங்குஞசுற்றிப்பாரடா
தெய்வமென்பதுகுற்றம தெளிநதுபாருசுற்றம்
கையைக்கொட்டுசத்தம் கண்டுகொள்ளுநித்தம
ஊனுறக்கமேயின்பம் ஊனிழநதாலேதுன்பம்
சாண்வயிறறுக்குஅன்பு சாதிமுறைமைவம்பு
ஓகோ-பலே-பலே சபாச-கண்டுகொண்டாய்

### கேதாரகௌளம்

சூதாடி தோற்றவன்போல — வாதாடிநிற்பதற்கு
வேதாந்தசாஸ்திரங்கள் — காதாரக்கேட்டிருந்தும்
என்னகாரியமதிலென்ன — வீரியம்-தள்ளு-தள்ளு

### புன்னாகவராளி.

இல்லையென்பதுகாட்டினுண்டு — கேட்டதில்லையா
தேகம்பட்டாலபுண்ணாகும் — பார்த்ததில்லையா
அம்பலமாவது ஆகாசம் — முற்றும்பாரு
அருளில்லைபொருளில்லை — கண்டுசேரு
பத்தியென்றாலுஞ்சித்தியென்றும் — வெற்றியென்றும்முத்தியென்றும்
இத்தனைநாள் கற்கலை — அத்தனையும்பித்தமாச்சு
மாறுபாட்டுக்காரன்வார்த்தை — கூறுபடுமோ
தாறுமாறுபேசினதால் — சோறுபோடுமோ

### நாதநாமக்கிரியை

எல்லாம்முழுப்புரட்டு — வல்லான்வகுத்தவழி
சொல்லாதேசும்மா — நில்லாதே
காரியத்தைப்பாரடா — உனக்கிணையாரடா
காசுபணஞ்சேரடா — இதுநல்லூரடா

### மாஞ்சை

கஞ்சிகூழ்குடித்தாலும் — பஞ்சமில்லையே
கொஞ்சமிருந்தாலும்போதும் — சஞ்சலமென்ன

### மத்தியமாவதி

சம்பாநெல்லிருக்குனக்குத்தாரேன — ஒற்றைச
சல்லாகிழித்துனக்குத்தாரேன் — ஒற்றைக
கண்டாங்கிசேலையொன்று — துண்டாய்கிடைக்குது
பெண்டாட்டிக்குக்கொடுத்து — நன்றாகவாழ்ந்திரு

### புன்னாகவராளி.

துண்டுவெட்டிப்பாகக்குதின்று — அண்டைவெட்டிப்பேர்த்தையா
கண்டனடிக்கட்டளையில் — முண்டிருக்குபார்த்தையா

### மோகனம்.

காணியில்லாதவனொரு — மாணியில்லாதவன்போலே
தோணினதுந்தோணுது — கோணிநடந்தாலுமென்ன
பெண்டாட்டியில்லாச — சுகமல்லவேமனம
கொண்டாட்டங்கொள்ளா — ததைசசொல்லவோ

ஆரபி

எருவிட்டுழுதவயல — மறுவிட்டுத்தேவையில்லை
எதுவெட்டினுலுநதாங்குந — துருவிட்டுப்பாக்கவேணுநதுரையே
நிலமபாராதபேர்கட்குப — புரையேயிதுவலலாமல
வேறேயுண்டாயிறையே — இநதவூருககுளிதுநலலவிரையே

அசாவேரி

மூலைக்காலவிளைநததாலை — சேலைககுககாணும
உனதுகூலிககுககாணும — குழநதைடாலுககுககாணுமலலவோ
ஊருககுளிநதிலஞசபபைபே — நீவாரிவிடவேணுமிநதககுப்பையே

சாவேரி

வாரிகாலைசசுற்றிப்பாரு — கோரையைபபிடுங்கிநம
தேரையையுமுழகசசொலலு — வீரியைநடுகச
செட்டியாாகுளததருகே — முட்டிருககப்போதையா
வெட்டியானகததருகே — திட்டிருககப்பாாதையா

புன்னுகவராளி

எல்லாமுனதுபொறுப — பொல்லாமுனதுசுக
மலலாமலவேறேகதியிலலை — இலலை
கட்டியடிககட்டிளையில — விட்டதுமுளைத்துதா
பொட்டைததிடலகுட்டையிலில — நட்டதுபலிததுதா
காடுவெட்டிநஞசைபண்ணு — மாடுகட்டிவைககோலபோடு
பாடுபட்டுழைததாலனறோ — வீடுகட்டிவாழலாம—நநதா

வசனம்

இப்படிசசொலலுும வேதியரை பணணையைப பாாக்கவாருமெ னறு நநதனர் கூபபிடுவாா

விருததம

பண்ணையாவையுமபாருமெனறழைததிடபபரிநது
கணணுலாவியவேதியனகளிபபுறநநதன
பண்ணுலாவுமபொனனமபலககூததனைபபரவி
யெண்ணிலாவருங்காதல்கொண்டிருநதனாதாமே

வசனம

கேவலமாகிய நீசன் சிவகணஙகளாலே ஒரு இராத்திரியிலநட டுநட்டு அறுப்பறுககுமவயலை வேதியர்கண்டு ஒன்றுந் தோனறுதவ ராகி யுலகவாசனையறறு நின்றார்.

வசனம

நந்தனார அம்பலவாணனைக் கொண்டாடிக் கூத்தாடுவார

கடுககா

நந்தனானந்தபரிதமானாநந்தனருமஆனந்தமாகினா
சொந்தமானவயலவந்துபாாக்கையில
விந்தையாசசுபலபந்தமபோச்சுது
சிந்தைதீரவேயந்தரங்கததில் — நந்தனு

நீசச்சாதியெனறுயேசிபபேசுமிந்த
தோசிவேதியனுமாசையாகவே
தேசமற்றுந்திலலைவாசமாகுநட
ராஜமூாத்திககுதாசனெனறுவருமம — நந்தனு

வாருவாருமிதைபபாருஞசிவ
ஞானேவந்துசெய்யுங்காரியங்களிது
பாரினமீதுளிணையாருமிலலையென
ஞாரினுளளபெரியோருஞசொலலசசொலல — நந்தனு

சிததபீதியொருகுறறமேதுமிலலை
சுததமானவிதயததிலுளளசிவ
பததிபண்ணிவெகுசிததியாகிவெர
முததிதேடிவருபததனெனறுசொலலும — நந்தனு

வசனம

வேதியா நந்தனாரைபபாாதது சிவபததரை அபசாரம் பண்ணி னேனெனறு மிகவும குறைந்து சொலலுவார

இராகம-பியாகடை—அடதாளசசாபபு

பலலவி

நந்தனாரேயுனறன — பெருமையினறுகணடேன
நானெனவிணணயை — விண்டேன

அநுபலலவி

விந்தையைககுறியாமல — விழலனெனறியாமல
வீமபுககுககசசுகட்டி — வீசினேனெனனையாளும — நந்

சரணங்கள்

அறியாமனததினுலேயேதேதோபேசியுந்தன
அருமையைத்தெளியாமற்போனேனே — மெதத

சிறியோர்செய்தபிழைபெரியோர்பொறுப்ப ரென்று
செப்புமவார்த்தையுமக்கேகனவானே இந்த
முறையுணர்ந்தோர்க்கென்ன தான்சொல்லத் தோணும்
மூடன்மேற்கிருபைவைத்துமுழுதுங்காத்திட வேணும்
நிறைவுற்றவருட்பெற்றோர்க்கேதுநிகரான காணும
நினைக்குமுன்னடிவணங்காதோனவந்துய சேணும நந

நேற்றுப்பொழுதளவுஞ்சும்மாவிருந்ததிந்த
நிலங்கள்முற்றும்பயிர்களமுளைத்துக திக்கச
சாற்றுங்கதிர்கள்முத்திசாய்ந்து அறுவடைக்கும
தக்கதாயிருக்குதேமிகக்கிளைத்து உமது
ஆற்றலதனக்குநிகராவாரோ யாவரும
அய்யாவுனதுநல்லவருளால்நலமே பெரும்
நாற்றிசையோர்களுமநாடிப்பணிய வரும
நாயேன்களிக்கமனமகிழ்ந்துகக்கிருபை தரும நந

குண்டைகளுங்கலப்பைகளோலுங்காருமவிதையுங்
கொட்டத்திலிருக்கநீர்செய்தீரோ அந்த
அண்டர்பணியுந்தில்லையாண்டவனே யுமக்கு
அடிமையாளாகிவந்துசெய தாரோ
துண்டம்தனத்தாலெனறெண்டுக்குமமைக்க கொண்டேன்
தொல்லுலகத்துள்ளோர்யாருமேசக்க கண்டேன
தொண்டனுமெனுமக்குத்தோத்தங்களை விண்டேன்
சொல்லும்பணிகளசெய்துசுரப்பட்டதுனி வுண்டேன நந

வசனம

என்று வேதியா நந்தனுரைப் பார்த்துச் சொல்லிப் பின்னுஞ் சொல்லுவார

இதுவும-வேதியர்சொல்-விருத்தம

கறைபடுங்கண்டன்றனைத்ததுபெறவேநோக்கி
குறையறுமநந்தனுரைக்குலமதுகீழெனறெண்ணி
மறைபுகல்பெருமையாலேவருத்தினேன்கொடியனென்று
இறைபடுமனமபோலஞ்சியேங்கியேயாற்றுவானே.

இராகம-புன்னாகவராளி-ரூபகதாளம.

சூற்றமெத்தனைசெய்தபோதிலுமுந்தன்சித்தத்திலந்நினையாதே-சிவ
பத்தனென்றறிந்துமல்பதறிவார்த்தைகளசொன்னபாவந்தலையாதே

புலையர்கள்பரகதிதேடும்படியவர்புண்ணியஞ்செய்வாரோ-உன்னை
கலிதீரக்கண்ணாரக்கண்டபோகளெல்லாங்காட்சிபெறுவாரோ
உருவமனதறியவொருவனலாகாதென்றுலகம்மொழியாதோ-அது
திறமாச்சுதினியுநதன்ஜெனமசபலமாசசுதெய்வமுமிரங்காதோ
ஜாதியிலிழிகுலஞ்சாஸ்திரஙகிடையாது சநதேகப்படலானேன்-இப்
போ, ஆதிசிதமபரரகசியமபாரென்றயனுபபிவிடலானேன்

வசனம

இப்படி வேதியா மிகவும் பரவசமடைநது நடந்த வரலாறறை க்கேடக, நாளைபபோவாா கனவிலே ஈசனவநது கருணை செய்வாரெ ன்றார். அதற்கு வேதியா சொலலுகினறா

இராகம-யமுனகலயாணி-ஆதிதாளம

பலலவி

நநதாவுனகனவினிலெபபடிவநதா॥
வரநதநதாரெநதாய் நநதா

சந்ததமுனசனகாதிமுனிவாதொழுஞ
சசசிதானநதமூாததியலலவோ நநதா

ஆதிமுடிவுகிடையாதபராபரஞ
சோதியலலவோநீசசாதியெனறறிநதும நநதா

அண்டரண்டநிறைகின்றசபாபதிக
கொனறுமபேதமிலலையெனறுதெளிநதுன நநதா

வசனம

வேதியா தானசெய்த பிழையெலலாம் பொறுத்துக்கொள்ளு மீரென்றுசொலல, நநதனர் மறுவுததரங கூறுகினறா

இராகம-தெண்டகம-எதுகுலகாமபோதி

வேதியர் - ஏழைபார்பபான்செய்திடுமபிழையை
யேறறுககொள்ளாதே நான்
இனமறியாதவன்முன்புததிக்காரனென்பதுவும்பொய்யோ

நநதனா - பொய்யாகிவிநதவுலகததைபபாாககும
புண்ணியவானே நான

புலையனுங்களடிமையல்லவோ புத்திசொலலுமையே
வேதியா - புத்தியுண்டுவித்தையுண்டு
பத்திகிடையாது வாயால
புலம்பினதாலென்னமனமடங்காதுபோதங்கிடையாது
நந்தனார் - கிடைக்குஞ்சிதம்பரதெரிசனமென்று
கிருபைசெய்யு மையே
கீழ்க்குலமல்லவோநாயினுங்கடையேன்கீர்த்திசெய்விப்பீரே

வசனம்

பரமபக்தனாகிய நீ எனக்கு அடிமைவேலை செய்பவன்போல வந்தபடியினாலே எனபிறவிப்பிணி யொழிந்ததென்று வேதியர் சொல்லுகின்றார்

அறுசீரடி விருத்தம்

அவபபொழுதுபோனதனறிமறைமுடிவைபுளங்கனிய
வறிவினுணர்த
தவப்பொழுதுங்கணப்பொழுதுங்கண்டறியாயபாவியெனைச
சாாநதாரனரே
சிவக்கொழுந்தினடிமையெனறுபெயரிட்டுவேலைகளைச்
செய்ததாக
பவககடலைககுளப்படிபோலதாணடிவரச்செய்ததுநந்தன
பத்திதானே

இராகம்-ஆனந்தபைரவி

நந்தாநீசிவ பத்தன-உன்னை
நம்பாமலேமோசமானேனுனை பித்தன நந்தா
பூமிக்குள்நீயொரு சித்தன-இந்தப
பூமிக்குநானொருசாஸ்திரபபிர சித்தன்
காமிக்குள்ளேவெகு மத்தன்-உன்னைக்
கணடுதெரிசித்தேனாரவரு முத்தன நந்தா
படித்துமென்னவெங்கள் வேதம்-அதில்
பாாத்ததில்லையிந்தபகவனற் கீதம
எடுத்துச்சொன்னாய்சிவ போதம்-அது
ஏறகாமறபோசசதுயென்பிடி வாதம நந்தா

தெவிட்டாதசோகம் பாணி-உந்தன்
தேகமுழுதினுஞ்சிவன்றிரு மேனி
பகையாகியவொரு கூனி-போலே
பழுததேனுனுநீயாததும ஞானி நநதா

பவசாகரந்தாண்டிச சென்றாய்-உள்ளே
பாாததுணர்நதுபபரமானநதங கொண்டாய்
தவமாமுனிபோலே நின்றாய்-தில்லைத்
தாண்டவராயனைககண்ணாலநீ கண்டாய் நநதா

வசனம

இபபடி வேதியா சொலலுமபோது, நநதனா் மனம நொநது கைகால நடுஙகி ஐயரைசசுறறிவநது தலைவணஙகி எனக்கு அனன ங்கொடுதது ஆடையளிதது இததனைநாளுங் காபபாறறின பெரிய வரே உஙகளுககடிமைவேலை செயயுமெனனை இபபடிப் பெருமை யாய்ச சொலலவேண்டாமெனறு சொலலுகின்றா.

இராகம-கலியாணி-ரூபகதாளம.

பலலவி

ஐயாசொலலு வேணே-உம
தடிமைபபறையன தானே

அநுபலலவி

மெய்யாகவேபிரதமேதினிவாழ் வோர்கள்
வேலைசெயயூழியர்தமமையோதாழ் வாாகள் ஐயா

சரணஙகள.

வேமபுக்குயர்நதமதுரஙகள பூட்டினும்
வீறுமதனகுணமமாறுமெதந நாட்டினும
ஆமபுததிக்காரனெனனுலேயாவ துண்டோ
அய்யனருளையலலாமலுமவே றுண்டோ ஐயா

மேவுங்கீரைததண்டுமேருவைத் தாங்குமா
வீசுங்கதிரமுன்மின்னும்பூசசி யோங்குமா
ஆவதழிவதெல்லாமையன றன்னாலே
ஆசசுதென்றாலென்னவாசகது யென்னாலே ஐயா

முன்னமேசெய்தவினையின்வ சத்தாலே
மூடப்புலையனாய்மேவி யதனாலே

இன்னல்படுவதுடனின்னமும் ஏண்டா
ஏந்திக்கொள்ளுமென்றெனைக்கெடுக்க வேண்டாம ஐயா

வசனம்

நந்தனார், தனது ஆண்டையாகிய வேதியரைப்பார்த்து தங்களுடைய திருவாக்கினால் எனனையுமிப்படிப புகழலாமோவென்று மிகவும் வணக்கமாய்ச சொல்லுகினறார்

இராகம்-அமிர்தகலியாணி

பல்லவி

சின்னசாதியலலவோசிதம்பரம்போய்வருகிறேனேன் சின்ன
அன்னை தந்தையொருவரில்லையடைக்கலமெனனையாளவேணும சின்
ஈரமிலலாதநெஞ்சமாகியிறைசசிதினறுவுடலபெருத்த சின்ன
அல்லும்பகலுமதுவையுணடுயறிமயஙகியாட்டஙகொளளும் சின்ன

வசனம

இப்படிச்சொல்லிய நநதனுரைபபாாததது வேதியாசொலலுகின்றார்.

இராகம்-தேவமனோகரி-ஆதிதாளம

பல்லவி

ஆருக்குததான் தெரியும அவர் மகிமை
அமபலநாடக மாடியபெருமை

அநுபல்லவி

பாருககுள் மாநதாகள் காணபதுதொல்லை
பதஞசலிபுண்ணிய புண்ணியமில்லை ஆருக்

சரணஙகள

தேவர்களபூமழைகொணடு சொரிநதாா
சிததவிததியாதராகணடு மகிழ்நதார
பாவலர்நாவலாஉளளங் குளிாநதாா
பார்வதியமமனுஙகூட யிருந்தாள ஆருக்
காதில்குழையதுவிழுநதது காட்டாா
கண்டிடுமஅன்பரைவிண்டிட மாட்டார்
பாதாளம்நடுங்கவேதாண்டவம் போட்டார்
பக்தியில்லாதவாதங்களைக் கூட்டாா ஆருக்
பாலகிருஷ்ணன் பணிந்தேறறும பிரதாபம்
பரந்திடும்பேர்க்கில்லைபுண்ணிய பாவம்

சீவகுணமருவும் ஞானபபிர தீபம்
தேவமனோகரமாகிய ரூபம ஆருக்

இராகம-பைரவி-திரிபுடை-தாளம

பல்லவி.

ஆருககுப்பொன்னமபலம கிருபையிருக்குதோ
அவனே பெரியவனும

அநுபல்லவி

பாருக்குள வீடுகள மாடுகள ஆடுகள
பணமிருந்தாலவன் பெரியனுமோ ஆரு

சரணங்கள

வேதபுராணங்களோதினதாலென்ன
வேலைசூழபண்ணமாதராலென்னகாரியம்
சாதனையாகவராதொருநாளும்
மண்ணாசை பெண்ணாசை பொன்னாசைபொல்லாது ஆரு
பாணனமதங்கள டங்கவேசெய்தகோ.
பாலகிருஷ்ணன் தினந்தொழுமபொன்னம்பல
வாணனென்றுதரவாய்விருமபாதவன
வானவராகிலுந்தானவனசின்னவன ஆரு

வசனம

சிவபத்தியுள்ளவன் பெரியசாதி, சிவபத்தியில்லாதவன் பார்ப்பானுயிருந்தாலுஞ் சின்னசாதி, ஆனபடியினாலே, திருப்புன்கூரிலுனக்காகப் பரமசிவன் நந்தியைவிலககி தெரிசனங் கொடுத்ததும, நீ குளமவெட்டினதும, ஒரு ராததிரிகாலததிலே நாற்பதுவேலி நிலமும் நடடுருஜமூாததியேவநது நடவுநடடதும, பாாக்கும்போது நீயே மகாபுண்ணியபுருஷனென்று சொலலவேண்டுமே யல்லாது. வேறில்லை. நீ இதுவரையி லெனதுவாாத்தையைத தட்டினதுமில்லை, ஆகையால், எனக்கு நீ குருவாகிகினறு உபதேசம பண்ணென்று வேதியர் சொல்லுகின்றார

இராகம்-தண்டகம்-ஆதிதாளம

பல்லவி.

நந்தா நீ-குருவுபதேசம்-நவிலிடவேணும-நான்கடைத்தேற
நொந்தனுன்கதிபெறமாட்டேன்
நோயினுமபிறவிககடலிடைவீழ்வேன நந்தா

மந்தாரப்பூவெடுத்தானார்மலரடிசாத்திவாழவென்றிவு
சிந்தாமல்வரந்தரவேணும்சிதம்பரரகசியந்தெரிசித்திடவே நந்தா
வைத்தாகருணைக்கடலுன்மனதிற்சென்றாநீநிர்த்தனமபுரிந்து
ஒத்தாசைபூதகணங்களுரிமையுடனவந்தூழியஞ்செய்ய நந்தா
பெற்றாநீபெரியவனுந்தன்பெருமையையாரறிவேனோமூடன்
நத்தாமல்மோசமதானேனமபிகையைசொன்னேனற்கதிபெறவே நந

கலி-விருத்தம.

வேதமோடறஞ்செய்திடுநூற்களைவிதித்தும
ஆதனுதியுன்னடியவாக்கடுஞ்சினமடைய
பாதகமபுரிந்தேனென்றுநந்தனைபபரவி
ஏதந்தீரவேவேதியருபசரித்திருந்தார்

வசனம

இப்படிசசொல்லிய வேதியாவாரததைதயைத தளளப்படாமை யால, சுற்றிவநது தலைவணங்கி ஒருமூலையைநோககி நநதனா சொல் லுகினறாரபபோல சொலலுகின்றார்

இராகம-புன்னாகவராளி-ஆதிதாளம

பல்லவி

ஐயேமெததககடினம-உனககடிமை-ஐயேமெததககடினம

அநுபல்லவி

பொயயாதபொனனமபலததையாமிருககுமிடம
நையாதமனிதாககுவயயாதுகண்டுகொளளுமம ஐயே

சரணங்கள

வாசியாலேமூலககனல் வீசியேசுழனறுவரப
பூசைபண்ணிபபணிநதிடு மாசறககுண்டலியைவிட்
டாட்டுமே-மனமூட்டுமே-மேலோட்டுமே-வழிகாட்டுமே இநத
மானாபிமானம்விட்டுத்-தானாகினின்றவாககுச
சேனாதிபதிபோலே-ஞானாதிபதியுண்டு
பாருமே-கட்டிககாருமே-உள்ளேசேருமே-அதுபோதுமே அஙகே
சஙகையறவேநினறு பொங்கிவருமபாலுண்டு
அங்கமிளைப்பாறிககொண்டு தஙகபபொமமைபபோலவே
நிலலுமே-ஏதுஞ்சொலலுமே-ஞானஞ்சொலலுமே-யாதுமவெலலுமே
இநத

அட்டாங்கம்பண்ணினாலும் கெட்டாங்குபண்ணியது
கிட்டாதுகிட்டிவர வொட்டாதுமுட்டியது
பாயுமே-மூளைதேயுமே-அதுவோயுமோ-உள்ளேதோயுமேவேத

மந்திரத்தாலேபோட்டு யெந்திரத்திலேபார்க்குந்
தந்திரத்திலேயுமில்லை அந்தரத்திலே அவ
தானமே-அமுதானமே-மலகினமே-பேசாமோனமே அந்த

முப்பாழுந்தாண்டிவந்து அப்பாலேநின்றவர்க்கு
இப்பாரவைகிடையாது அப்பாதிருநடனம்
ஆடுவார்-தாளம்போடுவார்-அன்பாகூடுவார்-இசைபாடுவார் இதை

கண்டாருங்கிடையாது விண்டாருஞ்சொன்னதில்லை
அண்டரண்டகோடியெல்லா மொன்றாய்ச்சந்திமந்திருக்கு
மல்லவே-பறையன் சொல்லவோ-அங்கேசெல்லவோ-நேரமாகுதல்ல
[வோ

பாலகிருஷ்ணன்பணிந்திடுஞ் சீலகுருசிதம்பரம்
மேலேவைத்தவாசையாலே காலனைநறுபோவேனென்று
சாத்திரம்-நல்லஸ்தோத்திரம்-சற்பாத்திரம்-ஞானநேத்திரங்கொண்டு
ஐயே

கலி-விருத்தம்

ஞானமேவியவும்பார்வாழ்த்தியமறையைக்
கானமேசெயும்வேதியரேயுமக்கடிமை
யீனமாமிழிகுலத்தினிலெய்தியநந்தன்
ஞானவாரிகொண்டேயவருளுநறநினைந்தார்

வசனம்

இப்படி நந்தனார்சொல்ல, வேதியார்கேட்டு திவ்வியஞானமடை ந்து நந்தனரைப்பார்த்துச் சொல்லுகின்றார்

இராகம்-சாமராகம்-ஆதிதாளம்

கண்ணிகள்

சிதம்பரம்போய்நீவாருமையா நான்
செய்ததெல்லாம்பசாரமையா சிதம்
சிதம்பரம்போவீர்பதம்பெறுவீர் வேறே
சிந்தனைவேண்டாமந்தமேயினிமேல் சிதம்
எத்திசையிலுமும்மக்கினைசொல்லப் போமோ
பத்தியேமுத்தலென்றுபழகியபெரியவர் சிதம்

சித்தமுந்தெளிந்ததுதெய்வமேநீரென்று
புத்தியுமவந்ததுசத்தியமல்லவோ சிதம்

வசனம

இப்படிச்சொல்லிய வேதியரைச்சுற்றிவந்து நந்தனார் தலைவணங்கி தூரவிலகிநின்று வேதியரை ஆசீர்வதிக்கச் சொல்லுவார்.

இராகம்-ஓரடியிரண்டுவார்த்தை-துக்கடா

| நந்தனார். | வேதியர் |
|---|---|
| சிதம்பரதெரிசனங்கிடைக்குமோ | கிடைக்கும் |
| ஜென்மசாபல்லியமாமோ | ஆகும் |
| பதம்பெறுந்தவநெறியறிகிலேனை | அறிவீர் |
| பரமசிவனருள்செய்வரோ | செய்வார் |
| சாதியில்தாழ்ந்தவனல்லவோ | அல்ல |
| சாத்திரமுறைமைக்குஞாயமோ | ஞாயம் |
| ஆதியம்பலத்தெய்வமநாடுமோ | நாடும் |
| ஆனந்தமடைவேனையரே | அடைவீர் |

வசனம

வேதியர் நந்தனருக்கு ஆசீர்வாதம்பண்ணி யனுப்பியபின்பு நந்தனருடைய குணாதிசயங்களைக் கொண்டாடுவார்

அறுசீரடியாசிரிய விருத்தம

அடியவர்கள்மனமிடியப்பேசின துண்டபாரத மனந்தங்கோடி, படுநரகிலவீழ்வாரென றெனவுரைக்கும பாவமது பலித்ததென்று, துடிதுடித்துத்தொடைநடுங்கி நீரவடித்துசிதம்பரத்தே துதிகள்செய்து, படிபுகழுந்திருத்தொண்டர்குணமெலாமுலகறியப்பகருவாரே.

இதுவுமது

சாத்திரக்குப்பையெல்லாந் தள்ளினேனப்பதறும்போலே
காத்திரஞ்சுத்தமாச்சு கனிந்திடுமுள்ளமபத்தி
மாத்திரமிருந்தாற்போது மற்றொன்றுமில்லைசைவச்
சேஷத்திரமுழுதுஞ்சுற்றி [illegible]

இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

எந்தநேரமுமநந்தனைசிந்தித்தா
னந்தமாகியிருநதனரநதணர் எந்த

பந்தநீரவேயிந்தவுருவாகி
வந்துதோவரந்தந்துதோசிவனென்று எந்த

வசனம்.

விட்டுதோ இநதவீட்டுக் கவலைகள்பட்டுதோ பவசாகரச்சேர ழித்திட்டுதோ நநதிவெள்ளம கரைபுரண்டுதோவென்று எங்கித தொழுது எநநேரமும வேதியர் இப்படியே சிவபததிபண்ணிக்கொண்டு ஆனநதமடைந்திருநதார். அப்படியிருக்க, நநதனா ஆதனூரைவிட்டு சிதமபரததை நோககி வருகின்றார்.

இராகம-லாவணி-ஆதிதாளம

நந்தனசிதமபரமவருகின்றார் ஆதனூரைவிட்டுக
கொள்ளிடநதாண்டியபபாலவருகையிலே
தொண்டரங்கமபரவசமாய்-எஙகுமபொஙகிசசிவமயமாய் நந்த

அநதககருணைவிருத்தியழிநது
அனேகசென்மவாசனையை
அனலகொண்டுதகிததாரே-சஞ்சித-விதையென்றுவெறுததாரே

குண்டலிசததியைக்கொண்டு
கிளமபிமண்டலமபுகுநது
சஞ்சரிததுக்கொண்டார-குறையா-வமிர்தமுண்டார்கிளையார் நந்த

அநாதிமாயகறபிதமிநத
நாமரூபாதிப்ரபஞசமெல்லா
யழிந்துபபோமென்பார்-குறைகட-லெழுந்ததுரையென்பார் நந்த

சைவததலங்களிற்றெய்வமிதுவே
சத்தியமபணணுவேனென்பறையன்
சதுரமறைகேட்டிலையோ-மிக்க-ஷண்மதங்கேட்டிலையோ நநத

எமபிரானநடராஜமூர்த்தியின்
இணையடிதொழுதார்க்கீடுரையே
னிந்திரபதஙகசரோ-திருமபியும்-வநதவர்காணகிலரோ நநத

ஈசன்கருணைலேசமிலாதவ
னெத்தனைவேதங்கற்றாலு
மெட்டாப்பெருங்கொம்பு-நெருங்கித்-தொட்டால்செங்கரும்பு நந்த

ஆதனூரிலொருபுலையனுக்காக
அம்பலநாடகமாடுவரோ
அருந்தவம்புரிந்தேனே-கனவினில்-வருநதியுமிருந்தேனே நந்த

ஆகாசாம்பசதாசிவனைபொன்
னம்பலத்தாடியதேசிகனே
ஐயேயுன்னடிமை-மனது-நையேயுனனுடைமை நந்த

செழித்ததுவியனுலகெட்டி சசிகரங்க
ளைநந்தெரியுதுகாணையே
தில்லைத்தலமென்பார்-அன்புடன்-சொல்லப்பலமென்பார் நந்த

குதிப்பாரொருதரங்களிப்பாகண்ணீ
ருதிர்ப்பாரானந்தலாகிரியால
கொண்டாடிப்பாரே-குரவை-நன்றாய்ப்படிப்பாரே நந்த

பாரளந்தகோபாலகிருஷ்ணன்துதி
பாடுந்திருவடி பணிவேனே
பரகதியடைவேனே-பூமியில-மறுபடிவருவேனே நந்த

வசனம

நந்தனார் ஆதனூரைவிட்டுக் கொள்ளிடத்தருகில வரும்போது சொல்லுகின்றார்

இராகம்-முகாரி-அடதாளம.

பல்லவி

கொள்ளிடக்கரைபோனான்-நந்தன
கோபுரங்களைக்கண்டான

அநுபல்லவி

பள்ளச்சாதியிலும்பறைச்சாதிநானென்று
உள்ளமுருகியவர்வெள்ளங்கரைபுரள கொள்

சரணங்கள்

ஓட்டத்தின்மேலேறி-நந்தன்-ஓங்குமகிழ்ச்சிமீறி
நாட்டயெவருமநல்லநட்டனக்கூத்தாடியே
நண்புடன்கதிபெறலாமென்றுறுதிகொண்டு கொள்

திருநாளைப்போவாரென்னும்

அக்கரைபோனானே-நந்தன்-ஆனந்தங்கொண்டானே
சிக்கெனவேசிவசிதம்பரேசனைக்காண
சிந்தைமகிழ்ந்துசிவத்தியானஞ்செய்துகொண்டு கொள்

திருவாதிரைத்திருநாள்-செய்யுந்-தினமல்லவோயிந்நாள்
திருநடராஜமூர்த்திதிருமுகந்தனைக்கண்டு
சித்தங்களிப்பேனென்றுறுதிகொண்டு கொள்

வசனம்.

நந்தனார், இந்தப்பிரகாரம் தோத்திரஞ்செய்துக்கொண்டு கொள்ளிடக்கரையைத்தாண்டி வரும்போது தில்லைக்கோபுரத்தைக்கண்டு தரிசனம்பண்ணுவார்

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்

பல்லவி

கோபுரதெரிசனமே-எந்தன-பாபவிமோசனமே

தீமங்கள்மூன்றுந்தணிந்துவிடுமநலல
சோபனமுண்டாஞ்சோதிவிளங்கிய கோபு

விண்ணணைந்துமேலோங்கியேகண்டுநற்
கண்ணுளார்க்கெல்லாங்காட்சியளித்திடும் கோபு

அல்லும்பகலும்அமரர்துதித்திடும்
தில்லைக்கிறையோனதினமுமகிழ்ந்திடும கோபு

வசனம

நந்தனார், தில்லைத்தலம இப்படியிருக்குமென்று சொல்லுகின்றார்

இராகம்-நவரோஸ்-ஆதிதாளம

பல்லவி

மாங்குயில்கூவியசோலைகளும வாபீட்சகூபதடாகங்களுந்
தூங்கதிர்மண்டலமெத்தையுஞ் சொர்ணசபேசன்துஜபரமும
நாலுபுரத்திலுங்கோபுரமும் நவமணிசசித்திரமண்டபமும
சிலமுறுந்திருவீதிகளுந் தில்லைவேதியர்மாளிகையும்
கண்டேன்கலிதீர்ந்தேன் என்கவலையெல்லாமொழிந்தேன்
மண்டலம்புகழும்சபேசன்சந்நிதி வாழ்த்திப்பணிந்துநின்றேன்
தஞ்சமென்றடைந்தே னிந்தசசடலத்தால்நொந்தேனினியென்னை
அஞ்சவேண்டாமென்றொருதரஞ் சொல்லியழைத்தாலாகாதோ

அப்பாவுன்சரணந்தில்லைக்கரசேயுன்சரணம
ஒபபாரில்லாநாடகமபயிலுமொளியேநினசரணம்

கோபுரதெரிசனமென்கிற கீர்த்தனமுதற்கொண்டு

## சிதம்பரவிலாசமெனப்படும்.

சிந்து

சிவன்-வேடிக்கைதானென்று நாடிக்கொண்டே, அறியாதுபோ யிருந்த-செம்பொன்-னம்பலத்தாடியைக்கும்பிடவே, ஆதனூர்தனி யிருந்து-விடும் - அம்புகிபாலபபறநைதயமின்றித், தில்லையருகில்வந் தார-மனந்-தேறிக்கொண்டார் குறையாறிக்கொண்டார், கெண்டா மணியோசை

## திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

நாளைபபோவேனென்றுநாங்கள்சொலத்தெரியாது
பூளைபபூவாமபிறவிபபிணிபபொழியபபோவாராயப
பாளைபபூகமுகுதிரக்கும்பழம்பதியினின்றுபோய்
வாளைபபோறறெழுமபழனஞ்சூழதில்லைமருங்கணைந்தார்.

வசனம

இது பொழிப்புரை

நாளைபபோவேனென்று சொலலி அனேகநாள்கழியச் சபாநா தரைத் தரிசனமபண்ணவேண்டுமெனறு பேராசையை அடக்கக்கூ டாதவராய்ப பூளைபபூவையொதத நிலையாமையையுடைய பிறபபுக ளால உண்டாகிய சமபநதம நீஙகும்பொருட்டுப போகின்றவராய்ப பாளையையுடைய பொலிவாகிய கமுகுமரஙகள் சூழநதிருக்கும பழைமையுற்ற தமமுடைய ஊரிலநின்றும் புறபபட்டு ஆண்வாளை மீ னெனது எழுப்பி விளையாடும் வயல்களையுடைய சிதமபரததின எல லையை அடைந்தார்.

இராகம்-கரகரப்பிரியை-ரூபகதாளம

கெண்டாமணியாடுது-கண்டுபிணிவாடுது

| | |
|---|---|
| முததிமணிதேடுது | நாடுதுகூடுது (கெண்) |
| பரவசமாகுது | பாவங்களபோகுது (கெண்) |
| செனனமாணுதிகள் | மோகமுந்தீர்நதது (கெண்) |

சிந்து.

கெண்டாமணியோசை-காதில்-கேட்குந்தன்றூரதைப் பார்க்க வென்றே, கொண்டாட்டமாகிவந்தார்-கையைக்-கும்பிட்டேன் நமக கம்பிட்டதோ, வென்றேமனமகிழ்ந்தார்-திரு - வீதியிலேவந்து காத லுடன், கண்டார்களேயாறி-இரு-கண்களிலானந்தம் பொங்கிடவே, பணிந்தார்பரவசமாய்-நல்ல-பாக்கியசாலிகளாக்குமென்றூர், இதுதா னோ தில்லையபதி

வசனம

நந்தனா தில்லையைக்கண்ட ஆனந்தனுபூதியைச் சொல்லுகின் றூா

இராகம-தெண்டகம்-ஆதிதாளம்.

தில்லைததலததைக கண்டார்-அதுசித்துவிலாசமென்றூர்-அந்த
எல்லையிலே நின்றூா-மனதேகமாக்கிக்கொண்டார்
இருகணகள்நீா வடித்தாா-கொடுங்காமவலையையறுத்தாா
இருகையைதூககுவித்தாா தனகாலேககோணிககுதித்தார் இநத
ஐம்புலன்களே மறநதாா-பரமானந்தக்கடலுறைநதார்
தனதேகபாவ மறநதாா-தில்லைசிவனேயெனறிருநதார்

இராகம-பியாகு-ஆதிதாளம்

பலலவி

இதுதானோதில்லைத்தலம-இததனைநாளுமறியேன்
இதுதானோதில்லைததலம்

அதுவோயிதுவோவென்றலைந்திடுமபேயனைக்
கதிதருவேனென்றுகைகாட்டியழைததிடும் இது

காசினியிலிதைக்கயிலேயென்றெலலோரும்
பேசக்கேட்டதேயன்றிபேணிபபாாததறிந்திலேன இது

இராகம்-அசாவேரி-திசரமதாளம்

பல்லவி

ஆடியபாததததைததாரும்-உம்மைத்
தேடிவந்தேன்-இதோபாரும்பாரும ஆடிய

அநுபல்லவி.

நாடிப்புகழ்ந்துதொழும் சிவகாமிமனோகரரே
தில்லைநடராஜரே யுமதுகையைவிடமாட்டேன் ஆடிய

சரணங்கள்.

பாதகிரமலலவோ பாலகிருஷ்ணன்பணிபரனே
சிதமபரக்ஷேத்திரதெரிசனம் வீடுசேர்க்குமென்றறியேனோ
மாததிரப்பொழுதுமமை மறக்கவென்மனதுவாராதென்றுமருவி
தோத்திரமபண்ணமாட்டேன்சுவாமி அதிலென்னசுகம் அமபலநத
[னில் ஆடிய

வசனம்

நந்தனார், தில்லையைககண்டு ஆனந்தஙகொண்டாடுவார்.

இந்துஸ்தான்-காபிராகம-ஆதிதாளம

பலலவி

தில்லைத்தில்லையென்றல்பிறவி
இலலையில்லையென்றுமறைமொழியும
தொல்லைத்தொலலையெனறகொடுவினை
வல்லைவலலையென்றகலுந்திருந்த — தில்லை

கறறோங்கற்றோங்களங்கமறிநதிட
பெற்றோமபெற்றோம்பேசாப்பெருமையி
லுற்றோமுற்றோமபொன்னமபலநதனில
தத்தோநததோமென்றநடனமிடும — தில்லை

வாடிவாடியேமாலயனிருவரும்
கூடிக்கூடிககொண்டல்லுமபகலுந்தான்
தேடிததேடிததிருவடிமுளைகளைப்
பாடிபப, ?க்கோபாலகிருஷ்ணனைதொழும் — தில்லை

துககடா-இராகம-தேசிகதோடி-ஆதிதாளம.

பல்லவி.

இதுவோதில்லைசசிதம்பரக்ஷேத்திரமீசனிருப்பிடமோ

சரணங்கள்.

மதுரைபொழிந்திடும
மாமுனிவர்தவம்
பதவிபெறுநதொண்டர்
பலதெய்வமுநதொழும

மறையோரிருபபிடம்
வாழுமபெருமிடம
பணிநதுவருமிடம்
பாகதிதருமிடம இது

இராகம்-பியாகு-ரூபகதாளம்.

பல்லவி.

ஆடுஞ்சிதம்பரமோ-வையன் கூத்தாடுஞ்சிதம்பரமோ

ஆடுஞ்சிதம்பர மனபாகனிககவே
நாடுமசிதம்பரம நமசிவாயப்பொருள் ஆடு

ஆருமறியாமல் அமபலவாணனா
சீரடியாாபாாக்கச சேவடிதூககியே ஆடு

பாலகிருஷ்ணனபோறறும பணிமதிச்சடையினா
தாளமத்தளமபோட தாதெய்தெய்யெனறு ஆடு

இராகம-தனனியாசி-திசரஜாதிதாளம்

பல்லவி

திருவாதிரை தெரிசன ததிறகுவநதேன்-உநதன
திருவாதிரை தெரிசன ததிறகுவநதேன்

அநுபலலவி

திருவாய்திறநதுறவாயினிபிரவாவரந தருவாயெனறு திரு

சரணங்கள்

கஙகுகறையேதுபவக கறைதாணடவேவுனதுசிவ
கங்கைதனிலமூழ்கிதவக கடலுங்குளபபடியாகவே திரு

அலலும்பகலுனதுசபை அருகிலநினறுகூததாடினால்
கலலாமனமுருகும பரகதியுஙகைவசமாகுமே திரு

ஆலநதனைக்கண்டோடிய வமரர்துயாகெடக்காத்தவன்
பாலகிருஷ்ணன்பணியுந திருபபாதஙகனசபாபதி திரு

அறுசீரடியாசிரிய விருத்தம

தில்லையைக்கண்டபோதே தெளிநததெனனுள்ளமெல்லாம
பலலூழிகாலஞசெய்த பாழ்வினைதொலைநதுபோசசு
நலலருணடனஙகாட்டும நாயனாசிறசபைக்குள்
செலலுவார்மகிமைசெபப சேடனாலாகாதெனறே

வசனம்

இபபடித தில்லையைக் கொண்டாடி இதைப்பாராதவரே பாவி யென்பார

இராகம்-சவாயி-சாப்புதாளம்

பல்லவி

யார்க்குமிமாத்த திருவாதிரைநாளையில்வந்துசிதம்பரதேசிகனை
பாராதபாவிகட்கேதுமில்லையிந்தப்பாரில்வந்துபிறவாதவரே
வானிற்றொடுந்திருமாளிகைமண்டபமாமதிலுந்தில்லைமாநகரம்
காணக்கிடைக்காதபபாயிந்தபாக்கியங்காதில்கேட்டவண்ணங்கண்
[டதுவே
ஆதிபராபரமாகியதில்லைப்பொன்னம்பலவன்வளர்சந்நிதியில்
நாதமுங்கீதமுங்கேட்குதுவானந்தநாடகவேலையைநானறியேன்

வசனம்

நந்தனார் சிதம்பரங்காணத்தாற் சிவலோகங் காணேனென்பார்.

இராகம்-சாவேரி-ரூபகதாளம்

பல்லவி

சிதம்பரம்வந்துதெரிசியாதசென்மம்வீணென்றுபேசி
மனதிலெண்ணினார்பாதகமலத்தியானம்பண்ணினார்

பறையனுக்குமிந்தத்தலத்தைப்பார்த்தபின்புமோட்சபதவி
பலித்ததல்லவோபாவிசென்மமொழித்ததல்லவோ
தொண்டுகொண்டதங்களையாபெருமையெல்லாஞ் சொல்லிச்சொல்லி
துள்ளித்தாவினார்ஞானவிரையையள்ளித்தூவினார் [ந்
பூதலத்தினிலிதுவேதெய்வமென்றுநந்தனானந்தக்கடலில்
பொங்கிப்பாடினார்புண்ணியத்தலமென்றுதேடினார்

இராகம்-தண்டகம்-சாப்புதாளம்.

அரகரசங்கரவண்ணமேலேயம்பலத்தரனே
நானுந்தனைக்கலமென்று
உருகித் துதியாரோ-ஆனந்தம்
பெருகிப் பதியாரோ
முத்தியளிக்குந்திருமூலத்தானரைக்கண்டு
பத்திபண்ணுதவன்பாமரனல்லவோ
பாருக்குச்சுமையாச்சு-அவனிருந்து
மாருக்குச் சுகமாச்சு
மங்கையர்மோகமாய்மயங்கித்தினந்தோறும்
அங்கம்புளகிதமாவரிடுமேவல

கொண்டாழிக்குழைத்தாரே-அன்யாயமாய்
நாளையுங் கழித்தாரே
வீசிநடைநடந்தமெய்யும்பொய்யாகவே
ஓசையடங்கும்போதொருவருமங்கில்லைத்
தூசியும்போகாதே-காதறுந்த
ஊசியும் வாராதே
சிவசிதம்பரமென்றுதில்லைவெளியினின்று
பவசாகரமவென்றுபரம்பதமடையுந்
தவநெறிபொருந்தாரே-பொருந்தின
மவரையும் வருந்தாரே
சாத்திரங்கற்றுஞ்சத்தாமறையுணர்ந்தானுஞ்
சூத்திரம்பெற்றவனுஞ்சொன்னேனங்கார
மாத்திரம்போகாதே-கருணைக்கும்
பாத்திர மாகாதே
சரணாகதமென்றுசார்ந்தடிபணியாமல்
வருணாசிரமவிதிவழுவாதிருக்கினுஞ்
சென்மாதிகள்விடுமோ-சிரவண
மனனாதிகள் படுமோ
அட்டசித்திகள்பெற்றவாண்டாயிரங்கால
புட்டிருந்தாலுமென்மரணபயமெய்திடு
நட்டசென்மம் மாச்சே-மனிதசென்ம
மெட்டிவீணாய்ப்போச்சே
முப்பாழுந்தாண்டிமூலத்தீமூட்டிக்கொண்
டப்பாலேநின்றாலானந்தங்காணலா
மொப்பாரில்லையடா-ஊடுருவி
நிற்பா ரில்லையடா
ஆலமிடற்றடக்கியம்பலக்கூத்தனைக்கோ
பாலகிருஷ்ணன்தொழும்பரமசிவனேயென்று
பாடிப்படி யாரோ-பருவத்தில
தேடிப்பிடியாரோ

வசனம்

நந்தனார் சிவபக்திபண்ணுதலைச் சிந்தனைசெய்து இன்னமுஞ்
சொல்லுகின்றார்

இராகம்-சுருட்டி-சாபபுதாளம்

வானோர்புகழ்தில்லைவனநாதரவாழும்
ஞானசபையைப்போற்றிநமசிவாயவென்று
சொல்லாதவன்-கல்வி-கல்லாதவன்-வெகுபொல்லாதவன்

காசினிபுகழ்சிவகாமவல்லியைக்கண்டு
பாசமகலும்நெறிபாராதவன்சுத்தப்
பதராச்சு-ஆட்டினதராச்சு-கிருமிக்கெதிராசசு

ஆட்டுக்காலைசற்றேகேட்டுவாங்கியுள்ளே
நாட்டிக்கொள்ளாதவன்மாட்டுக்குவமையென்று
நாடாரே-கண்டுகூடாரே-என்றுநதேடாரே

அம்பலவாணனாருகில்வந்துகையால்
கும்பிட்டிறைஞ்சாதகுருடாகலுகக்குத்திற
மதியேது-பரகதியேது-பண்ணுமவிதியேது

நாக்கிருந்துஞ்சிவநாமத்தைநவிலாமல
சாக்குபபோக்குப்பேசுஞசண்டியவனை ககால
னடியானோ-கட்டிபபிடியானோ-கையால்பிடியானோ

வேதாந்தநூற்களைவிவரிததுணாநதாலு
மேகாநதபததியொன்றில்லாதவனுள்ள
முருகாது-கள்ளஙகருகாது-வெள்ளமபெருகாது

ஆதிமதியஞ்சடையழகனடி யகூததைப
பாாததுக்களிககாதபாவிமனிதாகமொன றும
பலியாது-வினைசலியாது-சீலம்பொலியாது

பாலகிருஷ்ணன்தேடும்பாதரசததைதககண்டு
சீலமுடனேயுண்டுசேபிக்காதவன்துன்பம
துலையாது-இன்பமநிலையாது-கன்மம்கலையாது

வசனம்

நந்தனார், சிதம்பரமபாராத கண்படைத்தாரை முகத்தைக்கெடுக்கவநத புண்படைததவரென்று சொல்லுவார.

இராகம்-ஆனநதக்களிபபிலே-ஒருபேதம்.

காணாதகண்ணென்னகண்ணோ
வீணானகண்மயில்கண்ணதுபுண்ணோ (காணாத)

சொல்லும்பொருளிறந்ததுரியவடிவமாகி
யல்லும்பகலுமற்றவானந்தபபேரொளி (காணாத)

பசியாமருந்தளிக்கும்பரமரகசியத்தி
லசையாமலேயாடும்மம்பலநாதனைக் காணுத
ஊராரும்றியாமலொளிகண்டுபிசகாமல்
சீராருகாற்கொண்டுயெழும்பியமண்டபம் காணுத
அண்டத்துளடங்காதவாசைவலையைப்பூட்டி
பிண்டத்துளடங்கியபேரின்பதேப்பத்தைக் காணுத
நாசிநடுவிருந்துநாதனேதானென்று
பேசாமற்பேசியபெருமையையொருநாளும் காணுத
என்னையானறியேனென்றிகழ்ந்திடும்பேயனை
தன்னந்தனியனுக்கிததருவனென்றழைத்தாரைக் காணுத
சோற்றுத்துருத்தியிதைச்சுமந்தநிறைவென்ன
ஆத்திமதியணிசடையழகன்மருங்கோயில் காணுத
சீலக்கமலமுகச்சிவகாமிமனமகிழ்
கோலக்கனகன்றிலலைக்குழகனுடியகூத்தைத் காணுத
பாலகிருஷ்ணன்தொழுமபாதத்தைப்பணிந்தொரு
நாளிலுமபிறவாதநலமிக்கவழிதேடிக் காணுத

வசனம்

நந்தனார், பத்திபண்ணுதவன முத்திபெறுவனென்று சொல்லுகின்றார்.

இராகம்-தெண்டகம்-ஆதிதாளம்

வேதம்படித்ததும்சாத்திரங்கேட்டதும்மெய்யினிலநீறுபூசுவதும்
ஆதிசிதம்பரதேசிகன்றிருவடிககாளாவலன்றனந்தம்
உடனேதலையும்பவபந்தனுசொன்னேன்சொன்னேன்சொன்னேன்
ஊனுறக்கமுதலாகியநான்குமுண்டேயுலகில்யாவருக்கும்
ஆணவமலநீத்தாகளறிவாரகத்தைசசுருக்கிக்கொள்ளுவரே
சகத்தைப்பொய்யாத்தள்ளுவரேசொன்னேனசொன்னேன்சொன்னேன்
அருந்தவமாமுனியாகிலும்நல்லராசைபொல்லாரறியாரோ
வருத்தப்படுத்திமனதைமயக்கிவைத்திடுமன்னமயக்கோசம
உற்றுப்பார்த்தாலதுநேசமசொன்னேனசொன்னேன்சொன்னேன்
அரவணைகோபாலகிருஷ்ணனல்லும்பகலுமபணிந்தேத்தும
திருவடிசரணுகதமென்றெண்ணித்தெளிந்தார்ககன்றேபரபக்தி
ஒழிந்தாக்கன்றேவாமுத்தி சொன்னேன் சொன்னேன் சொன்னேன்

## திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்.

இப்பரிசாயிருக்கவெனக்கெய்தலரிதென்றஞ்சி
யப்பதியின்மதிற்புறத்திராப்பகல்வாழ்ந்ததங்க
லொப்பரிதாய்வளர்ந்தோங்குவுள்ளுருகிக்கைதொழுதே
செப்பரியதிருவெல்லைவலங்கொண்டுசெல்கின்றார்.

வசனம

நந்தனார், இந்தத்தில்லைவாழந்தணர்களுடைய வீடுகள இத்த
ன்மையாயிருக்க, எனக்கு அவ்விடத்திற்குப்போகுத லடாதெனப்
பயந்து அந்தத்தலத்தின் மதிலினபுறத்திலிருந்து அளவற்ற பேர
ன்புடன் மனமுருகிக் கும்பிட்டுக்கொண்டு செல்லுதற்கரிய எல்லை
வலஞ்செய்கின்றா

விருத்தம.

அம்மையாந்தில்லைமாநகாமருங்கிடையணிந்து
சும்மையிட்டிருவிழிகளிலநீரறச்சொரிந்து
விம்மியேசிவனாசரிதங்களைவிரித்து
கொம்மைவிட்டவாபாடியுமானந்தங்கொண்டாா.

வசனம.

நந்தனார். தனக்கிந்த பாக்கியங் கிடைத்ததென்று கொண்டா
னடிக்கின்றா

இராகம-உசேனி-ரூபகதாளம்.

பல்லவி.

கொண்டானடிக்கின்றார்-தில்லைக்-கோயிலைக்கண்டுதாவிதாவி

அண்டரண்டந்தொழுமம்பலநாதனைக்
கண்டாரைக்கண்டுகொண்டோமென்றுநன்றாய்க் கொ

அஞ்சலிகொண்டுகளித்து அரகரவென்றுசெபித்து
குஞ்சிதபதத்தைத்துதித்துக்குரவைகள்பாடிக்குதித்து கொ

அங்கம்பரவசமடைந்து ஆனந்தக்கடலில்விழுந்து
பொங்கிச்சிவமென்றறிந்துபுவியதிரந்துபணிமிகுந்து கொ

இருகண்களில்நீர்பெருக யிறைஞ்சிமனதுருக
அருமைசசிவகதிதருந அமபலவாணன்வருக க|ெ

இதுவுமது

இராகம்-சௌராஷ்டகம்-ஆதிதாளம்

பல்லவி.

கொண்டாடினதாரே-நந்தனார் கோவிலைத்தாவித்தாவி
கொண்டாடினதாரே

அநுபல்லவி

அண்டாமகிழ்ச்சியாலே அரனேயென்று மென்மேலே

சரணங்கள்.

பண்டுநான்செய்ததே யோகம்-அதனாலுனக்
கொண்டுவந்தேன்மானிட தேகம்-ஆகவேயிந்த
புண்டரீகப்பதவை போகம்-கண்டேனென்போல
மண்ணிலெவர்க்குண்டு யோகம்-என்றுதுதித்துக்
கொண்டாடுமிவர்புகழைக்
கூறவஃதுமேயுற் சாகம் கொண்

வஞ்சமனைத்தையொரு மித்து-நினைந்தம்தாழாத
பஞ்சபாதகப்பேரை டுத்து-உளத்தாகளைக்
கெஞ்சியவர்களைய டுத்து-உழலாமே
கஞ்சமலர்ப்பதங்கொ டுத்து-ஆண்டருளென்று
வஞ்சிசிவகாமிதொழுய
மணவாளனைத் துதித்துக் கொண்

ஒருநாற்புறமதில சொலிக்க-ஊரெல்லைச்சுற்றி
வருவார்திரும்புவார் களிக்கசிரசின்மேலே
இருகைகுவித்துவாழ் வளிக்க-வேண்டுவாரிந்த
திருநாளைப்போவார்தான மிகுக்க-ஆகையாலிந்தப்
பெருவாழ்வடைவாரிவர்
பேதமில்லையே யுரைக்க கொண்

வசனம்

இப்படி நந்தனார் வீதியைச்சுற்றி சந்நிதி முன்வந்து தண்டாகாரமாய் விழுந்து பணிந்து புழுதிபடப்புரண்டு ஆனந்தமடைந்து திருச்சந்நிதியைத் தெரிந்து தெரிசனம்பண்ணுவார்.

இராகம்-லாவணி-ஆதிதாளம்

சபாதெரிசனங்கண்டான்-நந்தனுஞ்-சுபாவமுடனேநின்றான்
சபாதெரிசனங்கண்டான் கனிதபபிரபாவமாகியசபாபதியிருக்கும்
சதாகாலமும்வேதங்கள்மொழிந்திடுஞ் சிவகாரமாய்செழித்துவளர்
நதிடும், தில்லைமூவாயிரமுனிவர்கள் கூடமெல்லுமபகலுமவரவர்நாடும்
(சபா)

வசனம்

நந்தனார், தெற்குக்கோபுரவாயிலினின்று சபாபதியை நோக்கித் துதிபண்ணுவார்

இராகம்-செஙகலா-ஆதிதாளம்

பல்லவி

ஜெயஜெகதீசா-அதிசுந்தரகுஞ்சிதபாதா-ஓ-ஜெயஜெகதீசா

தில்லையைக்கண்டேன் தேறித்தெளிந்தேன்
எல்லையிலநின்றேன் இனிப்பிறவேன்காண்
ஞானக்கினியாரீடு-கரும்பே-இனிக்குதுபாரவீடு
ஆசாபாசத்தைத்தீர அறவெட்டியானந்தத்தின் முழுங்காட்டி
வைகுந்தமுமதுபாருக்குங்கிடையாது-இந்தசுகம்-பாருக்குளிணையேது
சரணந்தமென்றிங்கே வந்தேன்சாமிபாராக்கு
உமையடைந்தேன் ஜென்மதிகளானமிகநொந்தேன்
வேறொருதெய்வங்களை வருந்தேன் ஜெய

தென்றிசைக்கோணவந்தழைத்திடுமவேளையில
பெண்டுபிள்ளைகளபேயாட்டம
ஓட்டத்திலறியபெருங்கூட்டம
நானுமநமனுந்திண்டாட்டமஒருநம்பிக்கைதாரும
நானுனக்கருள புரிந்தாளுவேனென்று
கனவிலாகிலுமவாருந்தட்டியெழுப்பிக்கவலைகளைத்தீரும
அடிமையென்றுமனதுமகிழ்ந்துபாரும
தில்லைவெளியிலவாடாவென்றுசேரும-ஓ ஜெய

அரகரசங்கரனேபொன்னமபலத்தாண்டவனே
பரமதயாபரமூர்த்தியென்றடிபணிந்தேன்மனங்களிந்தேன்
சாதியில்சின்னவனுனைவீதியில்வந்தேனுக்காதோ
பாதகனுசெய்யினுஞ்சிதம்பரமென்று

பகர்ந்தால்பழைவினைபோகாதோ
நீதில்லாதபெருந்தவத்தோர்வந்தால்
தெரிசனஞ்செய்வேன்போதாதோ
ஆதிபராபரமாகியவுனைக்கொண்டாடுவேன் ஜெய

அபாரமாகியசமுசாரம்சதாவிஷயகாமாதிகோரம
உபாயமறிந்துகரையேறப்படாதுஜெகதீசுரமாயா
விலாசகரபிதமிந்தஜெகம்அனேகசஞ்சிதவாசனைகள்
சிவலோகமென்கிறபாவனையாலநிவாரணமபண்ணும்பெரியோர்கள்
பண்ணியதொழிலின்பயனறிவாராபாலகிருஷ்ணன்தொழுங்கழலணி
வார், எண்ணியபடியேதவமுறுவாரானதனதென்றுமுறையிடுவா
ர், சமாதிபண்ணியகமமாதிககிருததியமறபடாதபேதைகைவிடாதே
யும்நீ, சபாபதிவெகுகிருபாநிதியுள பிரதாபமறியேன் சுபாவமப
[றையன ஜெய

விருததம்

வாட்டுவாருடலவோபடதழலிடைவருததி
மூட்டுவாரமூலககனல்மதிமண்டலமுகடடில்
மாட்டிறைச்சியையருநதியபுலையனறனமனததா
ளாட்டுககாலசறமேறதநிடுமமபலததரசே

இராகம-இநதுஸ்தான்-காபி-ஆதிதாளம.

பலலவி

தாதாதாநீயாடியபாதம்தததிதெயததித்தெயயென்றாடியபாதம்
ஆதரவாகபதஞ்சலிமாமுனிக்கானநதநாடகமாடுந்திருவடி தா
ஆகமவேதபுராணங்களோதிய யோகிகளாலேதேடுந்திருவடி தா
சிநதைமகிழ்ந்துகுவிநதிடவே யதிசுநதரரஞ்சிதகுஞ்சிதபாதம் தா
பாரளந்திடுங்கோபாலகிருஷ்ணன்துதி பாடிப்பரவிப்பணியும்பாதம்

இராகம்-ரீதிகௌளை-ஜமபை தாளம.

பல்லவி

தாண்டவதரிசனந்தாரும-தாமதம்பண்ணவேண்டாம்-இது சமையம்
தாண்டவதரிசனந்தாரும்

அநுபல்லவி.

ஆண்டவனேயுன்பெருமையை யாறறிநதுரைசெய்வார்
நமபியிருக்கிறேன்பேதை யெநதனுக்கொருதரம தாண்

சரணங்கள்.

ஆசைவலைக்குள் தங்கிபொங்கி மயங்கித தடுமாறிமும்மதங்கள மீறி
யானெனதெனறுரைக்குமபாசகமலநெறிநிறுத்திட
மாயவன்கோபாலகிருஷ்ணன் பணிந்திடுமெஉன் திருவடி
தாரிதகுகுஜெம்தரிககணநதரி திரிகுதிரிகுதீம்தீமதககிடத்தகதோ
மென்றாடிய தாண்

வசனம

நந்தனா, பிறவிப்பிணிக்கஞ்சித துதிபண்ணுவார்.

இராகம-லாவணி-ஆதிதாளம.

அமபலவாணவுனசரணமடைநதேனனைழ
ஆதரிததாளுவதுன்பாரமலலவோசொலலவோ
எடுததிடுஞெனஙகணகெழுததுலோாதெனபாடு
இன்னமுமபிறநதிடுவேனோநடேசனேயீசனே
ஆசைபொனபெருங்காட்டிலேயாறறுமமுழுமூடன்
அகலவிடாதேயுமநமபினேனுனனையயானேமெய்யனே
பாாளநதகோபாலகிருஷ்ணன்பணியுமலர்பபாதம
பாவியெனனுள்ளுறவேகருணைபாருமேவாருமே

வசனம

அமபலததிலாடும நடனததை வருணிததுசசொலலுவார்

இராகம-சஙகராபரணம-ரூபகதாளம

பலலவி.

ஆடியபாதா-இருவாகளைநாடுமவினோதா ஆடிய

அநுபலலவி

ஆடியபாதாவயனுமாலுநதினம
தேடியுஙகாணமறறிரைமறைவாக
திததித திததித திததித்தியென ஆடிய

சரணஙகள்

வீரவெண்டையஞ்சிலமபசைநதிட மேவுஞசடையாமபுலியசைநதிட
சாருநதொண்டாகளானநதுவிநதிடச சாலோகாதிபதவியுந
தநதோந தநதோந தநதோந தநதோமெனநடனம ஆடிய

வேதமுனிவர்கள்பாடவுஞ் சனகாதியோகிகள்கூடவும்
வெகுநாதமெங்கினுமோடவுந் திருநந்திமத்தளம்போடவுந்
தகுந் தகுந் ததுமென்று ஆடிய
பாலகிருஷ்ணன் துதிகள்செய்திடப்பண்ணவர்கள்பூமாரிபெய்தி[ட]
சீலமுள்ளசிவகாமிமகிழ்ந்திடத் திருசிற்றம்பலத்தரசனுந்
தாந் தாந் தாந் தாந் தாமென்று ஆடிய

வசனம்.

நந்தனார், அடிமைத்திறங்காட்டிச் சொல்லுகின்றார்.

இராகம்-கண்டகப-ஆதிதாளம்

அறிந்தறியாமலேசெய்தநபராதமையா-என்னை
ஆண்டவனேதில்லைத்தாண்டவராயா அடிமையுஞ்சரணம்
பருகியண்டபகிரண்டங்களகண்டிடமத்தாவுஞ்சரணம்
பதஞ்சலிக்காகநடம்புரியுந்திருவம்பலக்கூத்தாவுஞ்சரணம்
நடுவுமாதியந்தமுமொன்றுமிராதநிராமயனேசரணம்
பொங்குமாதியந்தக்கடலேவொளியேயறிவின்னறிவேயுஞ்சரணம்
என்றுமநித்தநிரஞ்சனநிட்களநிற்குணரூபாவுஞ்சரணம்
கருதிநின்மகிமைகொண்டோரறியாதகடையேனுஞ்சரணம்
எள்ளுக்குள்ளெண்ணெய்போலெங்குநிறைந்தயீசாவுஞ்சரணம்
எட்டிரண்டுமறியாதவனகனகசபேசாவுஞ்சரணம்

வசனம்

நந்தனார், இப்படியனேகவிதமாய்க் கொண்டாடி உட்புகுந்து தாண்டவம்பாராத மனக்குறைவுகொண்டு சுவாமியை நானுள்ளே வரலாமோவென்று கேட்கின்றார்

இராகம்-மாஞ்சை-ரூபகதாளம்

பல்லவி

வருகலாமோவையா-உந்தனருகில்நின்றுகொண்டாடவும்பாடவுநா
பரமகிருபாநிதியல்லவோவிந்தப்பறையனுபசாரஞ்சொல்லவோ உந்
தன-பரமானந்ததாண்டவம்பார்க்கவேநானங்கே வருகலா

பூமியில்புலையனாகப்பிறந் தேனே-நான்
புண்ணியஞ்செய்யாமலிருந் தேனே
சாமியுன்சந்நிதிவந் தேனே-பவ
சாகரத்தையுங்கடந் தேனே

கரைகடந்தேனே சரணமடைந்தேனே - தில்லை
வரதாப்ர தாபமும பாபமுந்தீரவே வருக

வசனம.

இப்படி நந்தனா தில்லையில்வந்து கொண்டாடிப பின்பு பத்தி மார்க்கத்தை யெடுத்துப பேசுகின்றார்.

சிந்து

இதுதானோ தில்லைப்பதி - என்று - எக்கலித்தாராடிக்கெக்கலித்தார்
ஐயாவுன்சந்நிதியைக - காண - வாசை கொண்டுவந்தேனே சமுடன்
தெருவில்பொடித்தூளை - அள்ளித - தேகமுழுதிலுந்தாகமுடன்
தரித்தார் திருநீறாய் - நாலு - சாஸ்திர வேதங்கள் பார்த்துணரும்
பெரியோரிருக்குமிடம

வசனம

நந்தனா, தில்லைத்தலம இப்படியிருக்குதென்று சொல்லுகின்றார்.

இராகம - செந்தக்கடுக்கா - தண்டகம - ஆதிதாளம

ஆகமங்கள்பலவேதியங்கள சிவனடியாாகள கூட்டம் - மன
தேகமாகியெபபோதுமவிளைகின்றயோகிமுனிக ளோட்டம் - பூ
லோகமிதுகைலாசமென்றுமிதை ப போறறுவாாக ளாட்டம் - அதி
வேகமாகவெஙகேயாகினுமவெளியேபோகவேணு மையே
இஙகிருக்கலாகாதையே இஙகிருக்கலாகா தையே
பாவிபபறையனிஙகேவரலாமோ சுவாமிதரிசனந தரலாமோ
பாதகமலஙகளை தடொடப போமோ
பாவமெனைபபிரிநதுசொலைப போமோ
இஙகே ஆகாதாகா தையே
வேள்விசெய்யுமபுகைமேலுலகெழுமபிபபோத தையே
புண்ணியவான்கள் புரியுநதவமுடன்
அரகரசிவனென்றுஆடிபபாடிககொண்டு
பரிவுடன்றனைபபிரதட்சணமவருமிடமஆகாதாகா தையே
மணியாடுதுவெகுசனங்கூடுது வீதிவலமாகுது திருப பதம்பாடுது
உள்ளோடாடுதுபணிவிடைபோகுதுபாவசமாகுது மெத்தபபய
மாகுதே இங்கே ஆகாதாகா தையே
தீண்டாதே இங்கே வண்டாதேசுமமாயிறையாதே இங்கேதரியாதே

என்னைப்பாராதே படியேறாதே உள்ளே போகாதே வரலாகாதே
யென்பார் ஆகாதாகா ஜைதயே

சிந்து.

பெரியோர்சிறுகுமிடம்-இந்தப-பேயனிருப்பதுஞாயமல்ல
காஞ்சபறைச்சாதி-திலலை-நாதன்றெரிசனமாதரவாய்ப
பண்ணப்படுபாவி-இநதப-பாரிலிருப்பதுசீரலவே
என்றேகுளத்தோரம-புக்கி-ஏங்கிநின்றார்துயர்நீங்கிநின்றார்
ஓயாபபெருங்கவலை-கொண்டு-உ ள்ளங்குழைநதிட வெள்ளமெனக்
கண்ணீர்கரைபுரள-இரு-கைதொழுவாரவர்மெய்தொழுதார்
கீழேபுரண்டழுதார்.

## திருநாளைப்போவார் புராணம்.

விருத்தம்

செல்கின்றபோழ்தந்ததிருவெல்லைபணிநதெழுந்து
பல்குஞ்செநதீவளாத்தபயிலவேள்வியெழுமபுகையு
மல்குபெருங்கிடையோதுமடங்கணெருஙகினவுங்கண்
டல்குந்தங்குலநினைநதேயஞ்சியணைநதிலாநின்றார.

வசனம

திருநாளைப்போவார் சிதம்பரததுக்குப் போனபொழுது அந்
நெல்லையைக்கண்டு நமஸ்கரித்து எழுநதுவிருததியாகச்சிவந்த அக்
கினியைவளர்த்து ஆகுதிசெய்கினற யாகத்தால உண்டாகிய புகை
யும் மிகுந்த பிராமணாகளின கூட்டம வேதமோதுகின்ற திருமடங்
கண்டு குறைவாகிய தம்முடைய குலததைநினைநது உள்ளேபோவ
தற்குப்பயநது நினறார.

இதுவுமது-விருததம்

நின்றவரங்கெய்தரியபெருமையினைநினைப்பார்முன்
சென்றிவையுங்கடநதாஞ்செழயிற்றிருவாயிலைப்புக்கார்
குன்றனையமாளிகைகடொறுங்குலவும்வேதிகைக
ளொண்டியழுவாயிரமங்குளவென்பாராகுதிகள்.

வசனம்.

சிதம்பரத்தெல்லையில் நின்றுக்கொண்டிருந்த திருநாளைபபோ
வார் தாம் உளளேயடையககூடாத அககோயிலின் பெருமையை

நினைப்பாராகி முதலில் அந்த எல்லையைக்கடந்து ஊரைச்சுற்றியிரு
க்கும் மதிலின் திருவாயிலை யடைந்தார் அங்கே திண்ணைகள் பொ
ருந்திய மலைகளைப்போலுயர்ந்த மூவாயிரம் வீடுகள்தோறும் ஓமங்கள்
செய்யப்படுகின்றனவென்று சொல்லிக்கொள்ளுவார் சுவாமியைப்
பூசிக்கின்ற தில்லை மூவாயிரவருடைய மாளிகைகள் மூவாயிரமென
முர். வேதவிதிப்படி ஆகுதிசெய்யும் பிராமணர்களுடைய வீதியில்
தாம் போகக்கூடாதபடியால், அதைநினைந்து தன்குலத்தை யிகழ்ந்
து இங்கிருக்கலாகாதென்று அவ்விடம்விட்டு ஒரு குளத்தருகில
வந்து சுவாமி உன்னைப் பாராத ஜென்மத்தை யேன்படைத்தாயெ
ன்று தாழப்புரண்டழுவார்

இராகம்-சரசாங்கி-ரூபகதாளம்.

பல்லவி

இந்தச்சடலமெவந்தவாறேதென்றறிகிலேன்
நானேதென்றறிகிலேன்

அநுபல்லவி.

சந்ததமுந்தில்லையம்பலத்தானை
சிந்தித்துமாயச்சிக்கறுக்காமல் இந்தச்

சரணங்கள்

அங்கமலங்களைப்போக்கிடுஞ்சிவ
கங்கையிலாடிக்களங்கமறுமல் இந்தச்

ஆடும்நடனங்கண்டானந்தமாகி
பாடிப்படித்துப்பணிந்துகொள்ளாமல் இந்தச்

அநேசக்கரத்தையெடுத்துருவேற்றி
வநேசப்பிறவியின்மயக்கறுக்காமல் இந்தச்

பாலகிருஷ்ணனதொழும்பாதத்தைக்கும்பிட்டு
சீலமுள்ளமுத்திசித்திபெறுமல் இந்தச்

இராகம்-கமாஸ்-திசரமதாளம்.

பல்லவி.

கனகசபேசன்சேவடி நான்கண்டதில்லை-தில்லைக்
கனகசபேசன்சேவடி

அநுபல்லவி

கனகசபாபதியைக் கண்டபேரைக்கண்டால்போதும்
ஜெனனமரணமோகந்தீர்ந்துசிவனைச்சேரலாமே "

தகணகசெம்தரி நம்தரி தோந்தோமதரிகிடதாதா
ததிமிதகிடஜெணு கிடதகததிகணத தோமென்றாடியதில்லைக் கஎ

அல்லும்பகலுமிந்த விஷையானந்தத்தில்மூழ்கி
அறிவுகெட்டமாடதுபோல் ஆனதுமெய்யோ
பல்லுயிரிலும்நிறைந்த பரமசிவஞானிகளே
பாரதத்தில்லைகேட்டதில்லை கோபாலகிருஷ்ணன்கவி
மானிடசாதியில்பிறந்து மங்கையர்மோகத்திலவிழ்ந்து
தானுந்தவமுறையிழந்து தனனாசுநாடாய்த்திரிந்து கஎக

இராகம்-தந்நியாசி-ஆதிதாளம்

பல்லவி

கனகசபாபதி-தரிசனம ஒருநாள்-கண்டால்கலி தீரும்

அநுபல்லவி

ஜனகமகாமுனிகைதொழுதேத்தும்
தினகரகோடிதேசோனமயமாகிய கனக

சரணங்கள்

மனதிலொடுங்கியகல்மிஷம போக்கும்
மாயப்பிணியதனை மறுவடி வாக்குமம
செனனமரணசமுசாரத்தை நீக்கும்
திருவடிநிழலிலே கூடியயார்க்கும் கனக

சுருதிமுடிகளிலுஞ்சொல்லிகொண் டாடும்
தூயவெளியையொளியாகவே கூடும
தருமநெறியுந்தவமுந்தள நாடும
ததிங்கணத்தோமென றுதாண்டவ மாடும் கனக

பறபலயோசனை செய்யத்தந் தொல்லை
பரகதியடையவுபாயமு மில்லை
அற்புதமாகவேதாரென்று சொல்லை
அணியுங்கோபாலகிருஷ்ணன பணியுந்தில்லைக கனக

இராகம-காகரபபிரியை-சாப்புதாளம

பல்லவி

கட்டைகடைத்தேறவேணுமே-கனகசபாபதிடனை
கண்டுகவரிநகவந்தநந்தனார்

கட்டைகடைத்தேறட்டுமோசென்மம்
கெட்டதல்லவோயிட்டமறியேன் — கட்டை

முத்தியளிக்கும்பத்தியிலேயென்
சிற்றம்பலவன் சித்தமறியேன் — கட்டை

வசனம்.

தேகம்படைத்தால் சிவபத்தி பண்ணவேண்டுமென்று நந்தனார் சொல்லுகின்றார்.

இராகம்-தண்டகம்-ரூபகதாளம்.

தேகம்வந்தவாறு சொல்லவோ-சிதம்பரேசனடியைத்
தினமுந்தொழுதிருப்பதல்லவோ

இந்தவிஷயசுகத்தை — நாடுமோ-பாவி
பனக்குரங்குமிருபயிடங்காணும — லோடுமோ
தில்லைத்தலத்தைக்கண்டு — மாச்சுதே-உள்ளே
சென்றுநடனதெரிசனமபண்ணுமற் — போசசுதே
பறையனென்றஜென்மம் — போகுமோ-பாழ்
வினையாலின்னம்பாரில்வந்துபிறகக — லாகுமோ
அடிமையென்றவநதே — னுய்யுமோ-ஒன்றையுங
கானறியேனம்பலதெய்வமென்ன — செய்யுமோ
பார்தமெல்லாமழிந்து — தோணுமோ-கோ
பாலகிருஷ்ணன்பணியும்பரமன்கருணை — வேணுமோ

வசனம.

சிதம்பரதெரிசனங் கண்டபேர்க்குச் சென்மமில்லையென்பார்.

இராகம்-மோகனம்-ரூபகதாளம்.

பலலவி

தெரிசனங்கண்டார்க்குமறுசென்ம — மில்லை
வரிசையுடனமபலவன்வாழ்கின்ற — தில்லை தெரி

இரவுபகலிடைவிடாதேகரசரண — பத்தி
இன்பமுறுமானநதம்பொஙகிவரும — நத்தி
பரவிவருமவனருகிலணிமாதி — சித்தி
பணிநதுவநதுசிற்றம்பலதலதைவலஞ் — சுற்றி தெரி

சொப்பனமென்றிவ்வுலகம்தோன்றிவரும் தேகம
சொன்னதுநீயென்றபடி தாரும் போதம
அற்புதமிதங்கமொடுதாளவகை கீதம்
அனவரதந்திருநடனமாடிவரும் பாதம் தெரி

அல்லும்பகலோயாதவடியார்கள் கோஷ்டி
அரகராவென்றமிர்தபான்மதைப ஜோட்டி
தில்லைவாழந்தணர்கள்கைபிடித்துக கூட்டி
சிகெனவேதிரைதிறந்துபரவெளியைக் காட்டி தெரி

நஞ்சுண்டகண்டனுக்குகொன்றைமலர் சாற்றி
நல்லதிருச்சாந்தணியுமம்பிகையைப போற்றி
குஞ்சிதபதந்தனதுமனதிலுரு வேத்திக
கோபாலகிருஷ்ணனருளுமநடராஜ மூர்த்தி தெரி

வசனம்

நந்தனார், தனக்கு தெரிசனங்கொடுக்க அம்பலவாணர் எப்போது வருவாரோவென்று விசாரப்படுவார்.

இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்

பல்லவி

எப்போவருவாரோ-எந்தன்கலிதீர
எப்போவருவாரோ

எப்போவருவாரோ எந்தன்கலிதீரச்
செப்பியதில்லைச் சிதம்பரதேவனே எப்போ

நற்பூருவமவந்து நாதனைத்தேடும
கற்பனைகளமுற்ற காட்சிதந்தாள் எப்போ

அற்பசுகவாழ்விலானந்தங்கொண்டேனே
பொற்பதத்தைக்காணேன் பொன்னம்பலவாணன் எப்போ

பாலகிருஷ்ணன்போற்றிப பணிந்திடுமீசன்
மேலேகாதல்கொண்டேன்வெளிப்படக்காணேன் எப்போ

இராகம்-துக்கடா-ஆதிதாளம்

வருவாரோ அருள்புரிவாரோ-எந்தன
மனதுசலிக்குது நானென்னசெய்வேனே
அரகரசங்கரவம்பலவாணனை
ஆதரிக்கதிருப்பாரோ ஒருக்கால்வருவாரோ

வசனம்

நந்தனார், தான் சின்னசாதியானதால் வருவாரோ வாராரோ வென்று சஞ்சலப்படுவார்

இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

வாராமலிருப்பாரோ-ஒருக்கால்-வருவாரோவறியேன

பாராமலிருப்பேனோ பதஞ்சலிமுனிக்குப்பொற்
பாதங்கொடுத்தபரமேஸ்வரனானென்று வாராம

கனவினில்வந்துகழனிமுழுதும்நட்டு
மனதுமகிழ்ந்துயென்னைவாவென்றுசொன்னவர் வாராம.

கலககமறவேயவர்காலுககுமபிட்டு
குளத்தங்கரையிநின்றுகூப்பிடுமவேளையில வாராம

அல்லலறுத்துப்பரமானந்தமேதருந
தில்லைத்தலத்தைக்கண்டுதெரிசனமபண்ணியும் வாராம

வசனம.

நந்தனார், இதுவரையில வராதபடியால இனிமேலதில்லைத்தலத்தைவிடாமற் சுற்றிவந்து தேகத்தைத் தள்ளுவோமென்று நிச்சயமபண்ணுவார

இராகம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி

இன்னம்வரக்காணிலேன்-என்னசெய்குவேனவர் இன்ன

இன்னம்வரக்காணிலேன் தில்லைப்பொன்னம்பலவாணன்பண்ணையும
நட்டென்னையுமிங்கேவாவென்றுசொன்னவர்மறந்தாரே இன்ன

சொல்லும்பொருமிந்தச் சோதியேமகிழ்ந்துவாழுந்
தில்லையைவிடாமற்சுற்றித்தேகத்தைமாற்றிக்கொள்வதுநன்று இன்

பாலகிருஷ்ணன்போற்றும்பாதச்சிலம்புகுலுங்ககோலமுடநடனங்
கண்டேனகுறைகளதீர்ந்துதென்றுசொல்லவுந்தான் இன்ன

வசனம.

நந்தனார், இப்படி சொல்லிக்கொண்டு கண்ணீர்சொரிந்து புரண்டழுவார்.

